உ

ஓம்

பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

" எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு."—திருவள்ளுவர்.



| தொகுதி | சித்திரபானு ௵ புரட்டாசி௴ ௧௨ | பகுதி |
|---|---|---|
| 28 | 1942௵ செப்டம்பர்௴ 17௳ | 3 |

## கடவுள் வணக்கம்.

செழுங்கமலத் திரளனநின்
சேவடி சேர்ந்தமைந்த
பழுத்தமனத் தடியருடன்
போயினர்யான் பாவியேன்
புழுக்கணுடைப் புன்குரம்பைப்
பொல்லாக்கல்வி ஞானமிலா
அழுக்கு மனத்தடியேன்
உடையாய்உன் அடைக்கலமே. [illegible]

வெறுப்பனவே செய்யுமென்சிறு
மையைநின் பெருமையினால்
பொறுப்பவனே அராப்பூண்பவனே
பொங்கு கங்கைசடைச்
செறுப்பவனே நின்திருவருளால்
என்பிறவியை வேர்
அறுப்பவனே உடையாய்
அடியேன்உன் அடைக்கலமே. (2)

பெரும்பெருமா னென்பிறவியை
வேரறுத்துப் பெரும்பிச்சத்
தரும்பெருமான் சதுரப்
பெருமானென் மனத்தினுள்ளே
வரும்பெருமான் மலரோன்
நெடுமா லறியாமல்நின்ற
அரும்பெருமான் உடையாய்
அடியேன்உன் அடைக்கலமே. (3)




# உலகின் எதிர்கால பாதுகாப்பு

"நொகுச்சி, சுகாவா, ஜெனரல் ஷியாங்கே ஷேக், மேடம் ஷியாங்கே ஷேக், காந்திஜி, நேரு முதலியவர்களையும், அவர்களது கலை, வேதாந்தம் ஆகியவற்றையும் தந்திருக்கும் சமூகங்கள் அந்தகாரத்தில் ஆழ்ந்து கிடக்கவில்லை. நாகரிகத்தின் விளக்கைப் பரஸ்பரம் உணர்வதன் மூலம் மனிதவர்க்கம் உன்னத வாழ்வை எய்தக் கூடும்."

இவ்விதம் அமெரிக்கப் பேரறிஞரான டாக்டர் எம். ஸீர்லி பேட்ஸ் என்பார் மேற்குறித்தவாறு கூறியிருக்கிறார். இவர் நான்கிங் மாஜி சரித்திராசிரியரா யிருந்தவர். அவர் சமீபத்தில் "மனித சமூகத்தில் பாதி" என்ற தலைப்பில் ஒரு புத்தகம் எழுதி வெளியிட்டிருக்கிறார். அந்நூலில் அவர் தற்போது கீழ்த்திசை நாட்டவர்களுக்குச் சுதந்திரம் அளிக்க வேண்டிய அவசியத்தை வற்புறுத்தி எழுதியிருப்பது இங்கு குறிப்பிடத்தக்கது. "கீழ்த்திசை நாடுகளிலுள்ள லட்சக் கணக்கானவர்களுடைய முன்னேற்றத்தை உத்தேசித்து அவர்களுக்குப் பரிபூரணமாகவோ அல்லது அதிகப்படியாகவோ சுதந்திரமளிக்க வேண்டும்" என்று அவர் ஓரிடத்தில் கூறியிருக்கிறார். மேலும் டாக்டர் பேட்ஸ், "வெளியிலிருந்து தாக்கப்படுவதைச் சமாளித்து பந்தோபஸ்து செய்வதற்காக உலகமெங்கும் கிறிஸ்தவர்கள் ஸ்தாபனம் ஏற்பட வேண்டும். சர்வதேச சச்சரவுகளைச் சமாதான ஏற்பாடுகள் மூலம் தீர்ப்பதற்கும், ஆயுதப் பெருக்கத்தைக் குறைத்து அமைதியும் ஒழுங்கும் நிலவச் செய்ய சர்வதேசப் படையை அபிவிருத்தி செய்யவும் மேற்படி ஸ்தாபனங்கள் ஏற்பட வேண்டும். சச்சரவிலுள்ள சில பிரதேசங்களைப் பொதுவான ஒரு தர்ம சொத்தாக வைக்க வேண்டும். சர்வதேச ஸ்தாபனத்துடன் ஒத்துழைக்கத் தயாராக இருக்கும் நாடுகளுக்கு மூலப் பொருள்கள், மார்க்கெட்டுகள் ஆகிய வசதிகள் உண்டு என்று உறுதி தரவேண்டும். பொருளாதார நிலையையும் வாழ்க்கைத்

தாரத்தையும் அபிவிருத்தி செய்ய வேண்டும்" என்றெல்லாம் தற்போதைய யுத்த அராஜகங்களை எப்படி போக்குவது என்பதற்குரிய மார்க்கங்களையும் பரிகாரங்களையும் கூறியிருப்பது நம் கவனத்தைப் பெறக் கூடியதாகும். கடைசியாக, அவர், "உலக சுபீட்சம், சமாதானம் ஆகியவற்றை உத்தேசித்து நாம் கீழ்த்திசைக் கலைகளைப் பரிபூரணமாக உணரவேண்டும்" என்று தம் வாதங்களுக்கு ஆதாரமாக ஒரு முடிவு கூறினார்.

மேற்குறித்தவாறு டாக்டர் பேட்ஸ் கூறும் கொள்கையை அனுசரித்தே டாக்டர் ஹியுஷி என்பவரது பேச்சு இருப்பது இங்கு ஒப்பு நோக்கத் தக்கது. இவர் சீன ஸ்தானீகர் பதவியிலிருப்பவர். இவர் சமீபத்தில் நடந்த சர்வதேச மாணவர் மகாநாட்டில் பேசுகையில், இப்போது நடந்துவரும் யுத்தம் நின்ற பின்னர் கூட்டுப் பாதுகாப்பு முறை ஏற்படுத்த வேண்டியது அவசியம் என்று வற்புறுத்திக் கூறினார். அவர் இதுபற்றி விரிவாகக் கூறுகையில், "அந்நியரின் துராக்கிரமிப்பு பயமில்லாமல் வாழும் உரிமையே எல்லா உரிமைகளிலும் முக்கியமானதென நான் எண்ணுகிறேன். அதாவது, தங்கள் எல்லைக்குள் அந்நியரால் ஒருவித ஆபத்தும் ஏற்படாது என்ற உறுதி எல்லா தேசங்களுக்கும் ஏற்படச் செய்யவேண்டும். உலகில் ஜனநாயகம் ஓங்கவும் மனித சமூகம் பத்திரமாக வாழவும் செய்யவேண்டிய ஒரு ஏற்பாட்டைச் செய்யாமல் எனது தலைமுறை 20 வருஷ காலத்தை வீணாக்கி விட்டது. உலகின் எதிர்கால பந்தோபஸ்து பொதுவாக எங்கும் சமாதானத்தைப் பாதுகாக்க தேசங்கள் தங்களுடைய பொருளாதார, ராணுவ சாதனங்களைத் திரட்டி வைத்துக் கொள்வதையே பொறுத்திருக்கிறது. எந்த தேசமும் அக்கிரமமாகப் பலாத்கார முறையைக் கையாளாமல் தடுக்கும் பொருட்டு உலகிலுள்ள பல்வேறு சாதனங்களைச் சர்வதேச ஆதிக்கத்திற்குள்ளாக்க ஒரு ஏற்பாடு செய்யவேண்டும்" என்று கூறி முடித்திருக்கிறார்.

இவ்விரு பிரமுகர்களைப்போலவே, உலகம் புகழும் உத்தமரும் நமது மாபெருந் தலைவருமான மகாத்மா காந்தி உலக க்ஷேமத்துக்கான உறுதிகளை அடிக்கடி கூறி வந்திருக்கிறார். இந்தியாவின் க்ஷேமம் அல்லது விமோசனமே உலகத்துக்கு க்ஷேமம் அல்லது விமோசனத்தை உண்டுபண்ண முடியுமென்று அவர் வற்புறுத்தி வந்திருக்கிறார். காந்தி அடிகள் உண்மையில் உலக முழுவதையும் பிடித்திருக்கும் துன்பத்தையும் தொல்லைகளையும் போக்கவே இந்தியாவுக்கு இச்சமயம் விடுதலையளிக்க வேண்டுமென்று கூறி வருகிறாரேயொழிய, தம் நாட்டுக்கு மட்டும் நன்மை வேண்டுமென்ற குறுகிய நோக்கத்தோடு கூறவில்லை. இந்தியாவின் சுதந்திரமும் சமாதானமும் தான் உலகில் சுதந்

நத்தையும் சமாதானத்தையும் ஏற்படுத்தும்; உலகத்தின் நிரந்தர சமாதானத்துக்கு இந்தியாவினால் தான் வழி காட்ட முடியும் என்று மகாத்மா வற்புறுத்தி வந்திருப்பதை, பொது நலத்தில் கருத்துடையவர்கள் இதற்குள் மறந்திருக்க மாட்டார்கள். டாக்டர் பேட்ஸனும் டாக்டர் ஹியுஷியும் வெளியிட்டிருக்கும் மேற்குறித்த அபிப்பிராயங்களில் மகாத்மா காந்தியின் கொள்கைகளும் தத்துவங்களும் பிரதிபலிப்பதைக் காணலாம்.

ஆனால், மி. சர்ச்சில், மி. அமெரி போன்ற பிரிட்டிஷ் அதிகாரவர்க்கத்தினர்க்கு மட்டும் மகாத்மா காந்தி கூறி வரும் உண்மைத் தத்துவத்தின் உயர்வு புலனாகவில்லை. அவர்கள் மகாத்மாவின் தீர்க்கதரிசன மொழிகளின் மகத்துவத்தை உணராததோடு, அவரைச் சிறைப்படுத்தி அபசாரம் இழைத்திருக்கின்றனர். அத்துடனில்லாது, தங்களது முறை தவறிய செயலை உலகம் சரியானதென்று கருதும்படி செய்ய, பகிரதப் பிரயத்தனஞ் செய்து வருகின்றனர். மகாத்மாவையும், மற்றும் காங்கிரஸ் தலைவர்களையும் அரசாங்கத்தார் கைது செய்தது காரணமாக, தேச மக்களிடையே மனக் கொதிப்பு ஏற்பட்டதன் எதிரொலியாக, நாட்டின் பல பாகங்களிலும் நிகழ்ந்துவரும் துர்ப்பாக்கிய சம்பவங்களை—அராஜகச் செயல்களை யெல்லாம் காங்கிரஸ்காரர்களின் தூண்டுதலால்தான் நடைபெற்று வருகின்றன என்று சாதிக்கின்றனர். சமீபத்தில், லண்டன் காமன்ஸ் சபையில் நீண்டகாலத்துக்குப் பின்னர் சர்ச்சில் இந்தியாபற்றிச் செய்திருக்கும் பிரசங்கத்தையும், அதை யொட்டி கர்னல் அமெரி பொழிந்திருக்கும் வசைமாரியையும் கவனிப்பவர்கள் நாம் கூறுவது முற்றும் உண்மை யென்பதை உணர்வர் தொழிற் கட்சியார் உட்பட பிரிட்டிஷ் அதிகார வர்க்கத்தினர் அனைவரும் இந்தியா சுதந்திரக் கோரிக்கை விஷயத்தில் மாறுபட்ட அபிப்பிராய முடையவர்களாய் இருக்கின்றனர் என்பது கிரீன் உட் சமீபத்தில் இந்தியாவுக்குச் சுதந்திரம் வழங்குவது தர்ம பூர்வமான காரியம் என்று கூறியிருப்பதிலிருந்து அறியலாம்.

மிக நெருக்கடியான இந் நிலைமையிலும் இத்தகைய மனோபாவ முடையவர்களுக்கு நாம் மிஸ்டர் பிட் என்பார் 'ஸ்டேட்ஸ்மென்' பத்திரிகையில் எழுதியுள்ள கடிதத்தில் குறிப்பிட்டுள்ள வார்த்தைகளை இங்கு கொடுத்தால் போதுமென நினைக்கிறோம்.

"சுதந்திரம் ஒவ்வொருடைய பிறப்புரிமையாகும், அது ஒருவர் தானமாகக் கொடுத்து இன்னொருவர் வாங்குவதல்ல." ஆகவே, இந்தியாவுக்கு உடனடியாகச் சுதந்திரம் ஏற்படச் செய்வதே, எதிர்காலத்தில் உலகத்துக்குத் தக்க பாதுகாப்பு ஏற்படுத்துவதாகும் என்று, மி. சர்ச்சில் போன்றார்க்கு எடுத்துக் காட்ட விரும்புகிறோம்.

# புத்தாண்டு வாழ்த்து.



**12**

அணி செய்யும் சேவையில் அன்பு நிலைத்தோய்!

வணக்கம்.

நீண்ட நாட்களாக போதினியின் சாதனையைக் காணுகின்றோம். உறுதியான அஸ்திவாரத்தின் மீது எழுப்பப்படும், ஆடாத அகத்தைப் போல், மாறாத பக்தியின் எழுச்சியால் ஆக்கப்பெறும் ஆனந்தனின் இனிய சேவை, அன்பின் மறுமலர்ச்சிக்கு மிகவும் உதவி செய்து நிற்கின்றது. என்னும் நிறை எழில் தெய்வம், தங்கள் மலையசையினும் நிலையசையாத சத்திய சாதனைக்கு, சக்தியையும், மகிழ்வையும் மேலும் நல்க வேண்டுமாய் பிரார்த்திக்கிறோம்.

வேண்டும் அன்பு!

பூபதி தாஸன்,

அன்புமார்க்க சங்க ஸ்தாபகத் தலைவர், கொளும்பு.

**13**

அன்பருளம் அமர்ந்தருளும் ஆனந்தபோதினி!
அம்பலத்தில் ஆடுகின்றான் அருளால்நீயும்
இன்றமிழை எங்கணுமே பரப்பி எழிலாய்
இலகுவாய் வான்றமிழ்க் கொண்டலாம் கோதாய்!
பொன்றாத பொருளே! புண் ணியத்தின் பயனே!
பொற்புடைய கனியே! இன் கனியின் சுவையே!
குன்றாத குணக்குன்றே! நின்சீர் கண்டு
உறமிக விரைந்தரின்றேன் வாழிவா ழியென்றே.

S. நாராயணன், கடலூர்.

**14**

தேனினது சுவையறியா திருக்கும் மாந்தர்
காணினுமே களிப்புற்ற கண்ணேக்கும்—ஆனந்த
போதினியை யொத்தவொரு புத்தகத்தைக் கண்ணுறவே
மேதினியில் இலையாதல் மேல். 1.

நற்தமிழே நலிவுற்று நலமிழந்து நலிந்தவாட
செந்தமிழி னின்சுவையைச் சேர்த்து ஊட்டும்
ஆனந்த போதினிப்பேர் அமைந்ததொரு பத்திரிகை
காணுந்தோறும் களிப்பே மிகும். 2.

அமிழ்தினு மினிதாய அருந்தமிழி னின்சுவை
கமழுமாறு கட்டுரையாய்ப் புகட்டியே—தமிழுக்கு
மேலான பணியாற்றும் முனிசாமிப் பேருடையோன்
ஞாலத்தே என்றும் வாழி,

தா. மா. அப்பாவு, அம்மாபேட்டை, சேலம்.

## 15

பெரும்புகழ்சேர் தமிழ்மொழியிற் பெருநலஞ்சேர்
மதிமுகத்தாள் பெற்றேன் பல்ல;
கரும்புமொழி மொழிபலதான் கணக்கின்றி
வெளிவந்தும் காலத்தேவன்
விரும்புவணம் கெடிதலவும் வியன்தாள கண்டேன்
சிலவே அவற்றுண்மேலாம்
அரும்புகழ்சேர் தமிழ்த்தொண்டை
ஆற்றுகலம் மிகப்பெற்றும் ஆனந்தம்மே,
வழித்தொழுக வழி காட்டும் வளர்கலைச் சீர் கிளூட்டும்;
[வருத்தமோட்டும்;
அழிந்தொழியாவணம் தமிழர்க் கறிவுறுத்தும்; போதினியை
[அருளுமன்பீர்,
கழித்தொழி மூவெனின் பதியாண்டினி துழைத்த வயிற்றினிலே
[கருதிவ்வாண்டும்
பிழிந்தகனிச் சாறெனவே பேரின்பத் தொண்டாற்றிப்
பெரிதும் வாழி!

M. A. தேவராஜன், சேயாறு, திருவத்திபுரம்.

## 16

அரனவ னிடத்தம ரம்பிகை யருளால்
பெருமையுற்றிலங்கிடும் பெரிய வித்தலத்தில்
வன்மை வீரம் வளம்பல நிதியொடு
நன்மைத் தருகு நற்றமிழாராய்ச்சி
இன்மையதாய் மற்றிடர் தலைப்பட்டே
புன்மைகள்யா வுமே புணரிய மாந்தர்கள்,
செல்வமுந் தருமிகு செழிப்பையுமளிக்குங்
கல்வி கேள்வியும் பொருட் கருதுநைத் தொழிலும்
அரசியல் ஞானமும் ஆயுவின்ஞானமும்
பாவியலியல்ஞா னமும்படைத்து
நன்னெறி தீநெறி நடுவமர்ந் தாம் பொருட்
பன்னயமாகப் பலவுமுய்த்த தனைப்
பேணியும் வாழ்நலம் பெருக்கியும் போற்றி
யாரொடு பெண்ணுமகமதா நிருத்தியும்
மதிப்ப வாழ்ந்திடவே மழவருக்க வீலே
யுதித்து போதிவ வுறுத்தியமு வா
முதலே தென்னிய முத்தமிழில் வாழ்
பதியே புவிமிசைப் பல்லாண்டு வாழ்க
அன்பெனு மலர்க்கொண்டு மருந்தமிழ்த் தாய் மா
நின்பதந் துதிபுரிந்திருக்கிறேனுமா தோ.

சி. இராமசாமி, குகை, சேலம்.

# நொச்சித்திணை

(A. K. வசந்தகோகிலம்)

நொச்சி யெனப்படுவது மதில். திணை யெனப்படுவது ஒழுக்கம். எனவே, நொச்சித்திணையாவது மதிலினையும் அம் மதிலினுள்ளார் செயலினையும் பற்றிக் கூறுவ தொன்றாம். இப் பகுதி புறப் பொருள் வெண்பாமாலையிற் காணக் கிடைக்கின்றது. தொல்காப்பியர் நொச்சியென ஒரு திணை கூறாது அதனை உழிஞையுள் அடக்குவர். இதனானே இவ் விரு திணையும் தம்முள் மாறென்பது போதரும். உழிஞையின் பின்னரே நொச்சி கூறப்பட வேண்டியிருப்பினும் வெண்பாமாலையுண் முன்னரே கூறப்பட்டிருக்கின்றது. மதிலின் கண் உள்ள வீரர்கள் நொச்சிப்பூவினை அடையாளமாக உச்சியிற் சூடி மதிலைக் காத்து நிற்றல் பற்றியே மதிலும் நொச்சி யென வழங்கலாயிற்று. இம் மதிலானது நகரினைச் சுற்றி வானளாவ ஓங்கி பல எப்புழைகளையும் ஞாயில்களையும் உடைத்தாய் அமைக்கப்பட்டிருக்கும். இதன் உச்சியில் பல பொறிகள் உள்ளன. இவை பகைவர் முற்றிய காலத்து வீரரின்றியே பகைவரின் மீது போர் தொடுத்து அழிக்கும் ஆற்றல் சான்றன. இவை புரியும் மன கடுஞ் செயல்களை,

"மழுக்கள் வீசுவன நஞ்சுபூசுமுனை வாள்கள் வீசுவன முத்தலைக்
கழுக்கள் வீசுவன குந்தநேமியெரி காலவீசுவன காலனேர்
எழுக்கள் வீசுவன கப்பணங்கள்விட மென்னவீசுவன வன்னெடும்
கொழுக்கள் வீசுவன கற்கவண்கயிறு கோர்த்து வீசுவன வார்த்தரோ.
நஞ்சு பில்குதலை வாளெயிற்றரவு நாமிமிர்த்தெறியு மலையரா
வெஞ்சினங்கொள் முழை வாய்திறந்துபொரு வாரைவிக்கிடவிழுங்குமால்
குஞ்சரங்கொடிய முசலம் வீசியெதிர் குறுகுவார் தலைகள் சிதறுமால்
அஞ்சவெம்பொறி விசைப்பினுங் கடுகி யடுபுலிப்பொறி யமுக்குமால்"

என்னும் செய்யுட்களை நோக்குந்தோறும் அவை நம் முன்னர் நிகழ்வன போன்றன்றோ தோன்றுகின்றன. இவ்வளவோ? அம்மம்ம! இன்னும் அவை செய்யும் செயல்கள் கூறத்தக்கன வன்றாம். நிற்க, இம் மதிலினுள்ளார் வீரத்தை ஒரு சிறிது நோக்குவாம். இந் நொச்சித் திணையானேயே ஆசிரியர் நமக்கு பண்டைத் தமிழரின் வீர எழுச்சியை படம் பிடித்துக் காட்டுகின்றார். அவர் கூறும் ஒவ்வொரு உதாரணச் செய்யுளும் உள்ளம் மன்னும் பான்மையனவாய் மிளிர்கின்றன. அவர் கூறும் தமிழரின் வீரம் தற்காலத் தமிழர்களின் சங்கீரம் போன்றதன்று. "இன்றுயார் சா[illegible] மான்வர் புகழுக்கும் இறுதியுண்டோ" எனக் கருதி உயிரை மதியாது போர் புரிதலே அவர்கள வீரமாகும் எனப் பல விடங்களில் அவர் கூறுவதைப் படித்தும் தமிழர் உறங்குவராயின் நாமென் செயவல்லேம். இனி அவர் கூறுமாறு காண்போம்;—மதின் முற்றிய பகைவனது முரசம் அரணது காதுகளில் வீழ்வதன் முன்னரே நொச்சி வீரர்கள் உச்சி மலைகின்றனர் அப்பூவை, பகைவரது சேனை கடல் போன்றது அளவிடற்கரிய ஆற்றல் சான்றது எனக் கருதினரிலர் அவ் வீரர். மறு கணம் உழிஞையார்த்

தூசிப் படையின் மேல் பல பொறிகளும் தாவுகின்றன. வாள்களும் வேல்களும் வானிடை மின்னென வயங்குகின்றன. இரு படையினரும் முனைகின்றனர். பலர் விண்புக்கன ரெனினும் தம் கிடங்கும், மதிலும் அழியாது காப்பான் வேண்டிய கொச்சி வீரர்கள் உயிர் மறந்து, வளையும் வயிரும் ஒலிப்ப வாள்வீசி ஆர்க்கின்றனர். ஆயினும் பகைவரது பகழியான் பலர் படுகின்றனர். இவ்வரிய செயலை,

ஈண்டரில் சூழ்ந்த விளையு மெரிமலர்க்
காண்டகு நீள்கிடங்குங் காப்பாராய்—வேண்டார்
மடங்க வளைய மறவே லோர் தந்த
முடம் பொடு காவ லுயிர்.

என ஆசிரியர் அவாவுடன் கூறிச் செல்கின்றார். இஃதன்றி,

இன்னுமோர் அரிய காட்சி நமது ஐம் பொறிகளையும் அதிர வைத்து விடுகின்றது.

கிடங்கிடை நிகழும் இப் போர் ஒருவாறு முடிவுறுகின்றது. நாவாயும் தோணியும் மேற் கொண்டு கன்னார் நணுகுகின்றனர். அவர்களைத் தடுத்த வீரர் பலர் குருதிச் சேற்றில் புதை யுண்கின்றனர். மறுகணம் எயிற் போர் தொடங்குகின்றது. பகைவர் கொச்சி மேல் ஏணி பல சாத்தி ஏற முயல்கின்றனர். ஆண்டே, கற்பொறியும், பாம்பும், கனலும், கடிகுரங்கும், விற்பொறியும், வேலும் அவர்களைத் தாக்கித் தகர்க்கின்றன. எனினும் உழிஞை வீரர்கள் அவற்றையும் கருதாராய் உடும்பும், பாம்பும் போல் மதிற் கற்களைப் பிடித்து மேலிவர்கின்றனர். இவ்விடத்து தான் நாம் மெய்ம் மயிர் சிலிர்க்கும் குரிசிலின் தோற்றம் காணப்படுகின்றது. அவ்வாறு மேலிவரும் வீரர்களை, ஓர் வீரன் தனித்து நின்று கற்சிறை போன்று தடுக்கின்றான். அவன் கையில் வாள் ஒளி வீசி மின்னுகின்றது. எனினும் மறுகணத்தே அவ் வீரனின் கழல் வீக்கிய வலிய கால்கள் இரண்டும் மதிலி னுள்ளே வீழ்கின்றன. வாளேந்திய கைகள் மதிலின் புறத்தே வீழ்கின்றன. அந்தோ! கோரம்! கோரம்!!! இக் கோரக் காட்சியை ஆசிரியர்,

அகத்தன வார்கழல் நோன்றாள் அகத்தின்
புறத்தன போரெழிற் றிண்டோள்—உறத்தழீஇத்
தோட்குரிமை பெற்ற தலைவளையார் பாராட்ட
வாட்குரிசில் வானுலகி னான்.

என்று கூறி நம் துன்பத்தின் எல்லை அளவு கடவாதவாறு அக் குரிசில், தேவர்கள் புகழ அரம்பையர் தழுவ, "வானுலகினான்" என மனம் விம்ம காட்டிச் செல்கின்றார். இவற்றை எல்லாம் மேனின்ற வீரர்கள் நோக்கினா ரல்லர், வீரர்கள் பலர் மாண்டனர். பொறிகள் சிதைந்தன; மதிலும் நடுக்க முற்றது. மிகு படைகள் தவிடு பொடியாக்கப்பட்டன. விற் படைகள் புற் படைகளாயின; வேற் படைகள் காற்படைகளாயின; வாள்கள் துண்களாயின; எனினும் கொச்சி வீரர் உயிரை நச்சினாரிலர்; அவர் பெறுவது பெரும் புகழன்றோ? இவரது வீரம் கண்டு பகை மன்னன்

# சார்லஸ் லாம்ப்

(தா. மா. அப்பாவு.)

அறிவை அடிமைப்படுத்தி உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் உணர்ச்சி மிக்க கட்டுரைகள் வரைபவர் சார்லஸ் லாம்ப். இங்கிலாந்து நாட்டிற் றோன்றி ஆங்கில மொழியில் நற்புலமை எய்தி உணர்ச்சி மிக்க கட்டுரைகளையும் கருத்தை யுண்ணும் சிறு கதைகளையும் குன்றாச் சுவையுடைய கவிதைகளையும் வெளியிட்டு மங்காப்புகழ் எய்தியவர் அவர். அவரது நூல்கள் ஆங்கிலமொழியி லிருப்பினும் உலகெங்கணு முள்ள மக்களால் படித்து போற்றப்படுகின்றன. அவரைப்பற்றி நாமும் சிறிது தெரிந்து கொள்வது நல்லதல்லவா?

லாம்ப் 1775-ம் ஆண்டு லண்டன் மாநகரிலே பிறந்தவர். கிறிஸ்தவப் பள்ளி யொன்றில் கல்வி கற்று வந்தார். இவருடன் அங்கு கூடப் படித்து வந்தவர்களில் பிற்காலத்தில் புகழ்பெற்ற காலரிட்ஜ் என்பவரும் ஒருவர். லாம்பின் சகோதரியான மேரி லாம்பும் பிற்காலத்திலே இலக்கியத் துறையில் புகழ் எய்தினர்.

1791-ம் ஆண்டு இவர் தென்கடல் இல்லத்திலே (South Sea-House) கணக்காளராய் அமர்ந்தார். இரண்டாண்டுகட்குப் பின்னர் கிழக்கிந்தியாக் கம்பெனியில் எழுத்தாளராய்ச் சேர்ந்தார். இங்கு அவர் முப்பத்தைந்து ஆண்டுகள் கழித்தார். இவ் வாண்டுகளில்தான் அவரது முதற் கட்டுரைகள் லண்டன் சஞ்சிகை (London Magazine)யில் வெளியாயின. முதலில் ஓர் கவிஞனாக இலக்கிய உலகில் தோன்றிய போதிலும் பெரும் புகழ் எய்தியது தனது கட்டுரைகள் மூலம்தான். 'எலியாவின் கட்டுரைகளை' உலகம் அறியும். 'ஷேக்ஸ்பியரின் சிறுகதைகளை'யும் உலகம் போற்றிற்று.

லாம்பின் வாழ்க்கை துக்கம் நிறைந்தது. தன் வாழ்நாள் பூராவையும் பித்தம் பிடித்த தன் சகோதரியுடனேயே கழிக்கவேண்டி நேரிட்டது. தன் வாலிப வயதில் ஆன்சிம்மன்ஸ் என்னும் நங்கையைக் காதலித்தார். தன் மனத்தைக் கொள்ளை கொண்ட அம்மங்கையிடம் தன் வாழ்க்கையையே ஒப்படைக்கத் தயாரா யிருந்தார். ஆனால் அப்பெண் இவரை

---

மலைவு கொள்கின்றான். தமிழர்தம் ஆண்மை கண்டு புகழாதார் யாவர்? மதின மன்னன் பால் மகட் கொடை நேர்கின்றான். அவ் வமயமும் கொச்சி மன்னன் உடன் பட்டானிலன். எம் மகளைக் கொளக் கருதி வந்த மன்னனது மழகளிற்றின் கோடு 'எம் மனைது வெண்கட்டிற் காலென்பதை உம் மன்னன் உணர்வானாக' என திருபம் கொணர்ந்த தூதனை நோக்கி அவன் கூறும் கருத்து பொதிந்த மொழிகள் என்றென்றும் தமிழர் மனத்தே யுள்ளற்பாலன வன்றோ? என்னே தமிழரின் வீரம், என்னே அன்னவர் மாண்புறு வண்மை. வாழ்க தமிழர் தம் கொற்றம். வாழிய பாரத மணித் திருநாடு.

மணக்க மறுத்து, பெட்டாம் என்பவளை மணந்து கொண்டாள். இதனால் மனமுடைந்த இவருக்கு சம்சார வாழ்க்கையிலேயே ஓர் வெறுப் பேற்பட்டது. இவ்வெறுப்பை 'பிரமசாரியின் புகார்' என்று மோர் கட்டுரையின் மூலம் தெளிவாக்குகிறார். வேறொரு கட்டுரையில் சொல்லுகிறார். 'என் கனவின் தோன்றிய அக் குழந்தைகள் மெதுவாக நழுவத் தொடங்கின. அவை என்னுடைய குழந்தைகளல்ல. அவள் வேறொருவனை மணந்து கொண்டிருக்கிறாள்.'

அவரது ஒரே சகோதரன் வாலிப வயதிலேயே இறந்து விட்டான். இம்மாதிரி சம்பவங்களாலான துக்கச்சுடர்தான் 'கனவில் தோன்றிய குழந்தைகள்' மூலம் இலக்கிய அழகொளி வீசுகிறது. 'இதுதான் அழகு. துக்கம்தான் அழகு. ஏமாற்றம் ஓர் அழகு. வாழ்க்கை அழகியது. நான் உங்களுக்குச் சொல்லுகிறேன்—உங்களுக் கறிவிக்கிறேன்' என்று சொல்லுவதுபோ லிருக்கிறது அக் கட்டுரை.

லாம்ப் பெரிய ஆசிரியரென்று போற்றப்படுவதேன்? அவர் எழுதுவதிலே சுவை யிருக்கும்—உணர்ச்சி யிருக்கும். உள்ளதை உள்ளபடியே வெளியிட்டு அதை உங்களை நம்பச் செய்து விடுவார். படிக்கும்போது கதாபாத்திரங்கள் நம் எதிரில் கூத்தாடத் தொடங்கும். கௌரவமான முறைகளிலே நுண்மையான பொருள்களை அழகாக எழுதுவதில் லாம்ப் வல்லவர். தான் கண்ட அதிசயங்களை அழகு குன்றாது வெளியிட்டு அதன் மூலம் மகிழ்ச்சி யடைபவர். தனது மனத்திற் றோன்றியவைகளைக் கூட்டாமலும் குறைக்காமலும் வெளியிடுபவர். இவைதான் ஓர் இலக்கிய வாதிக்கு வேண்டிய குணங்கள்.

ஹாஸ்யம் ததும்ப எழுதுவதில் லாம்ப் தேர்ந்தவர். தான் வேலை பார்த்து வந்த கம்பெனியில் கூட உழைத்த கணக்கர் (Clerks)களைப்பற்றி வர்ணிப்பதைப் பாருங்கள். "கனவுலகிலே சஞ்சரித்துக் கொண்டிருக்கும் அம்மனிதர்கள் உயிருள்ள பேனாக்களைக் காதில் செருகிக்கொண்டு என்னை நோக்கி ஆந்தைபோல் விழிக்கிறார்கள். உயிருள்ள கடிதங்களும் கணக்குகளும் என்னைத் தொந்திரவு செய்கின்றன. நான் தவறாகச் சொல்லவில்லை, உயிருள்ள கணக்கர்களைப் புதைத்திருக்கும் சமாதிதான் இந்தப் பாங்கியின் இடிந்த கட்டிடம். உடல் பூராவும் காற்றோட்டம் கொடுக்கும்படியான (பல பொத்தல்களையுடைய), அங்கியை அவர்கள் அணிந்திருந்தனர். அவர்கள் உபயோகித்து வந்த பேனாக்கத்திகள் உருவான காலத்தைக் காண சரித்திரத்தைத்தான் புரட்டிப் பார்க்கவேண்டும்!

தாம் எழுதிய ஓர் கட்டுரையில் ஓர் பெரிய வீட்டை யழகாக வர்ணிக்கிறார். 'என் விடுமுறை நாட்களில் பெரும்பாகம் அவ் வீட்டின் உட்புறங்களுக்குள் சுற்றித் திரிவதிலேயே செலவாகும். ஆங்கிருந்த ரோம் சாம்ராஜ்யத்தை யாண்ட பன்னிரண்டு ஸீஸர்களின் உருவங்களைக் கண்டு இன்புறுவது எனக்கு ஓர் பொழுது போக்கு. அப்போது அவை என்னுடன் பேச இருப்பிடத்தை விட்டுப் பெயர்ந்து வருவதைப் போன்ற பிரமையுண்டாகும். அவ் வீட்டின் அறைகள் பெரியனவா யிருந்தபோதிலும் காலியாகவே கிடந்தன. கிழிந்துபோன திரைகளும் மங்கிப்போன சாயம்

களும் இற்றுப்போன சாளரங்களும் அவ் வீட்டிற்குத் தனிச் சோபையை யளித்தன. தோட்டத்தைக் கண்டு இன்புற நானொருவன் தான்—சிற்சில சமயங்களில் தோட்டக்காரன் வருவதைத் தவிர. மரங்களிலே பழங்கள் குலை குலையாய்த் தொங்கும்—செடிகளிலே நறுமணம் கமழும் பூக்கள் கொத்துக் கொத்தாய் பூத்திருக்கும். ஆயினும், இவற்றைப்பறிக்க எனக்குரிமையில்லை. பார்வைக் கழகாய்த்தோன்றும் சிறு செடிகளின் நறும் பூக்களையும் அழகிய காய்களையும் பறித்து விளையாடுவேன். சுற்றிலும் இன் மணம் கமழ பசும் புற்றரைகள் புரள்வதில் எனக்கோர் ஆனந்தம். கனிந்து தொங்கும் எலுமிச்சம் பழங்களை நோக்கும்போது எனது எதிர்கால வாழ்க்கையின் இனிய செயல்கள் நினைவுக்கு வரும். குளத்திலிருக்கும் சிறுமீன்களையும் அவற்றை சோம்பேறியான பெரிய மீன் ஏளனஞ் செய்து கொண்டிருப்பதையும் காணுவதில் எனக்கோர் களிப்பு—இவ்விதமாகத் தான் நான் சந்தோஷமாகக் காலத்தைக் கழித்து வந்தேன். இது மற்றையோருக்குச் சோம்பேறித்தனமாகவும் தோன்றலாம்.''

குழந்தைகளைபற்றிச் சொல்லும்போது, ''குழந்தைகள் கதை கேட்பதில் ஆர்வமுள்ளவர்கள். தாம் கண்டறியாத தம் முன்னோர்களைப்பற்றித் தெரிந்து கொள்வதில் மிகவும் ஆவல். தமது சிறிய அறிவைகொண்டு தம் முன்னோர்களின் செயலின் நன்மை தீமைகளை அளந்து விடுவார்கள்.

குழந்தைகள் என்றும் குதூகலமானவர்கள். மாசற்ற அவர்களது முகத்தில் வீசும் தெய்வீக ஒளி நமக்கு இன்ப மளிக்கிறது. இன்மொழி பேசும் நற்குழந்தைதான் உலகிலேயே இனிய பொருள்.''

லாம்ப் தமக்கு முன் இருந்த நூலாசிரியர்களுக்கு மிகவும் கடமைப் பட்டுள்ளவர். ஏனெனில் அவர்களுடைய நூற்களுக்கும் இவருடைய நூற்களுக்கும் மிகவும் சம்பந்தம் உண்டு. பைபின், ஷேக்ஸ்பியரின் மில்டன், மார்வெல், கவ்லி (Cowley), ஐஸாக் வால்டன் முதலியோருடைய நூல்களினின்று செய்திகளையும் சொற்கூட்டங்களை (Phrases) இவர் எடுத்தாண்டிருக்கிறார். ஆனாலும் இவருடைய எழுத்து நடையானது மற்றையவர்களுடையதைக் 'காப்பி' யடிக்காமல் தனித்த சுவையுடையது சர் தாமஸ் பிரௌனின் கட்டுரையில் விருப்ப மில்லாதவர்களும் அதையே லாம்ப் நவீன நடையில் எழுதும்போது மிகவும் சுவாரஸ்யமாகப் படிக்கின்றார்கள். ஹாஸ்லிட் (Hazlitt) எழுதினார் ''இம்மாதிரி உபயோகமற்ற பழைய ஆசிரியர்களின் நூல்களிலேயே மூழ்கிக்கிடக்கும் லாம்ப் பெரிய எழுத்தாளராய் வர முடியாது'' என்று. ஆனால், இந்த கொள்கைக்கு எதிராக, பழைய எழுத்தாளர்களின் கட்டுரைகளைப் பின்பற்றி நவீன முறையில் எழுதியதால் லாம்ப் மக்களது அன்பையும். பெருமதிப்பையும் பெற முடிந்தது. இவ்வாறு பேரும் புகழும் எய்திய சார்லஸ் லாம்ப், 1884-ம் ஆண்டு டிஸம்பர்மாதம் 27-ம் தேதி இறந்தார். அவரது பிரேதம் எட்மண்டன் மாதா கோவிலிலே புதைக்கப்பட்டது.

---

# "விநாயக சதுர்த்தி"

(பி. ஆர். ராஜரத்தினம்.)

விநாயக சதுர்த்தி, அல்லது பிள்ளையார் சதுர்த்தி என்ற விரதம், பிரதி வருடம் ஆவணி மாதம் பூர்வபட்சம், சதுர்த்தி கூடிய சுப தினத்தில் வரும். இந்துக்கள், முக்கியமாய் சிவ மதத்தை அநுஷ்டிக்கும் யாவரும் மிகவும் விசேஷமாகவும், சிரத்தையாகவும் இச் சதுர்த்தியைக் கொண்டாடுவார்கள். ஸ்ரீராம நவமி, கிருஷ்ண ஜெயந்தி, முதலியவைகளைப் போல் இது மிகவும் முக்கியமானதைத் தவிர, மற்றதைவிட இதற்கு ஒரு விசேஷம் உண்டு. மற்ற பண்டிகைகளை, வருடம் ஒருநாள் கொண்டாடி அதோடு அவைகளை மறந்து விடுகிறோம். மறுபடி அடுத்த வருடம் அப் பண்டிகை வரும் வரை அதைப்பற்றி நினைப்பதேயில்லை. ஆனால் பிள்ளையாரைப் பற்றி அடிக்கடி நினைக்காமல் இருக்க முடியாது. ஒவ்வொரு நாளும் நன்மை—தீமை போன்ற எந்தக் காரியம் செய்தாலும், அவரை வணங்கிவிட்டுத் தான் மேலே ஆரம்பிக்க முடியும். அப்படி செய்தால் தான் நாம் ஆரம்பிக்கும் காரியம், விக்னமில்லாமல் செவ்வனே பூர்த்தியாகுமென்று, நமக்குள் ஒருவித நம்பிக்கை. அதனாலேயே அவருக்கு விக்னேஸ்வரர் என்ற பெயரும் உண்டு. நம் வீட்டில் நடக்கும் சுப காரியங்களில், புரோகிதர் எனப்படும் வைதீகர்கள், மஞ்சளைப் பிடித்து வைத்து, புஷ்பங்களால் அர்ச்சித்து. ஸ்தோத்திரம் செய்து பிறகு மேலே செய்ய வேண்டியவற்றை ஆரம்பிப்பார்கள் என்பது எல்லோருக்கும் தெரியும். தவிர, இயற்கையாக நம்மை அறியாமலே, சில காரியங்களில் பிள்ளையாரை ஸ்மரிக்கிறோம். எவருக்காவது கடிதம் எழுதுவதாயிருந்தாலும், கதைகள், கட்டுரைகள் முதலிய எது எழுத ஆரம்பித்தாலும், நமது கை, நம்முடைய உத்தரவின்றியே தலைப்பின்மேல் பிள்ளையார் சுழிபோடுவது பிரத்யக்ஷம். பண லேவாதேவி, மனை, நிலம், முதலிய சாஸனங்களுக்கு பத்திரம் எழுத உட்கார்ந்தவுடன், 'உம்—பிள்ளையார் சுழி போட்டுண்டாச்சா? சரி எழுது' என்று வைஷ்ணவர்கள் உட்பட யாவரும் சொல்வது கண்கூடு. திருசினாப்பள்ளியில் மலையின்மேல் போய் உட்கார்ந்து கொண்டதால், உச்சிப் பிள்ளையார் என்று சொல்வதைவிட எல்லா இடங்களிலும் உச்சஸ்தானம் வகிப்பதால் உச்சிப்பிள்ளையார் என்று சொல்வது மிகப் பொருத்தமாய் இருக்கும். ஸ்ரீரங்கமாகிய வைஷ்ணவ க்ஷேத்திரத்தில், மூலஸ்தானத்தை அடுத்துள்ள முதல் பிராகாரத்திலேயே, விமானச் சுவற்றில், ஒரு பெரிய பிள்ளையார் இருப்பதும், அதற்கு. அன்று தினம் பூஜையும், கொழுக்கட்டை நிவேதனமும் கோவில் செலவிலே நடப்பதென்றால் சிலருக்கு ஆச்சரியமாய் இருக்கும். அப்பேர்ப்பட்ட விநாயகரை அனைவரும் அதன் உட்கருத்தை அறிந்து, தூயமனதுடன் பயபக்தியுடனும் கொண்டாடினால், காரியங்களில் சித்தியும், இகபர சாதனங்களும் பெற்று ஒரு குறைவுமில்லாமல் வாழ்வோம் என்பது திண்ணம்.

## கணபதி பிறப்பு

தேவர்களுக்கு நாளுக்குநாள், அசுரர்களால் கஷ்டங்கள் அதிகரித்து வந்தன. இம்சை பொறுக்க முடியாமல் அவர்கள் சிவபெருமானைக்

குறித்து தவம் செய்தனர். அவர் பிரத்தியக்ஷமாகி, "உங்கள் தவத்திற்கு மெச்சினேம். உங்கள் விரோதிகளாகிய, அசுரர்களுக்கு அரசனான "சிந்து" என்பவன் தவம் செய்து, தேவர்களாலும், மனிதர்களாலும், மிருகங்களாலும், சாவில்லாதிருக்கும் வரத்தைப் பெற்றுவிட்டான். ஆனாலும் கூடிய சீக்கிரத்தில், இம் முப்பிறப்பு மல்லாத கணேசமூர்த்தி தோன்றுவார். அவராலேயே உங்கள் துயர் தீர வழி பிறக்கும்" என்று சொல்லியருளினார்.

கைலயங்கிரியில் சிவபெருமானும் உமாதேவியும் ஒருநாள் ஏகாந்தமாய் இருக்குங்கால், ஓம் என்ற பிரணவ மந்திரம், சக்கரஸ்வரூபமாய் கோடிசூரியர்களைப்போல் பிரகாசிக்க அதனின்றும் ஒரு ஜோதி தோன்றி விநாயக உருவம் கொண்டு மத்தியிலிருந்து உற்பவித்து பாலவடிவமாக வந்து இருவரையும் வணங்கி நின்றது. அதை அணைத்தெடுத்து உச்சிமுகர்ந்து உமாதேவியார் தன் மடிமீதிருத்திக்கொண்டனள். சில படங்களில் சிவபெருமானும், உமாதேவியும், மடிமீது குழந்தை விநாயகருடன் உட்கார்ந்திருப்பதைப் பார்த்திருக்கலாம். துதிக்கையுடன் கூடிய யானை முகத்தோடும் நான்கு கைகள், மூன்று கண்களோடும் அவதாரமான அத்தினமே பிள்ளையார் சதுர்த்தி.

இப்படியாக ஒரு குழந்தை ஆவிர்ப்பவித்திருப்பதைக் கேள்வியுற்றான் அசுர குலத்தரசனான சிந்து. சற்று சிந்தித்துப் பார்த்தான். சிவபெருமானால் அளிக்கப்பட்ட வரம் ஞாபகம் வந்தது. 'மோசம் போனேம். மனிதர்கள், தேவர்கள், மிருகங்கள், அல்லாத புது ஸ்வரூபமாய் இருக்கிறது. இதனால் நமது அழிவு கூடிய சீக்கிரம் ஏற்படப் போகிறதென்பது திண்ணம். சீச்சீ! என்ன பேதமை; இச் சிறுகுழந்தையைக் கண்டு அஞ்சுவது நமக்கழகா? நமது வீரியமென்ன, பலமென்ன, புகழென்ன! இதென்ன ஏதோ அபசகுனம் நேருகிறது! புத்தி தடுமாறுகிறது! துர்சொப்பனம் கண்டமாதிரி மனது ஏன் தடுமாறுகிறது! இருக்கட்டும். எதற்கும் நாம் முன் ஜாக்கிரதையாய் இருக்கவேண்டும். இக் கணேசமூர்த்தியை இப்பொழுதே ஒழித்துவிட்டு மறுவேலை பார்க்கிறேன்' என்று சபதமிட்டான்.

இவ்வாறு உறுதி கொண்ட அவன் அசுரர்களில் சூரர்களாகிய வியோமாசுரன்; கடமாசுரன்; சதமைடன்; கிருத்திராசுரன், முதலியவர்களை பல தடவைகளில் ஒவ்வொருவராக அனுப்பி எவ்விதத்திலாவது கணநாதனை, கொன்று வரவேண்டியதென கட்டளை பிறப்பித்தான். அவர்களும் தங்களுக்குள்ள சக்தியால், சமயத்துக் கேற்றவாறு பலவேறு ரூபங்களை எடுத்து பலவித உபாயங்களால் முயன்றும் முடியாமல், கடைசியில் தாங்களே கொல்லப்பட்டு திரும்பிவாராது போயினர். சிவகுமாரனது லீலைகளைக் கேட்ட தேவர்கள் தங்கள் கஷ்டம் நீங்கியதாக எண்ணி மிகவும் சந்தோஷமுற்றனர்.

தம்மால் அனுப்பப்பட்டவர்களெல்லாம் இறந்து பட்டனர் என்பதைக் கேட்டு அதிக ஆக்குரோஷத்தை அடைந்தான் சிந்து. இந்தத் தடவை அதிபராக்கிரமசாலியாகிய கமலாசுரனை, எப்படியும் ஜெயத்துடனேயே திரும்பி வருவாயாக எனக் கட்டளை யிட்டனுப்பினான். கமலாசுரனும் தன் சதுரங்க சேனையுடனும் கோபக்கனல் வீசப் போருக்குக் கிளம்பி விட்டான்.

இதைக் கேள்வியுற்ற தேவர்கள் அஞ்சி நடுநடுங்கி மறுபடி மஹாதேவனின் காலில் போய் விழுந்து ரக்ஷித்தருளும்படி வேண்டினர். அவர்களைக் காக்கும் பொருட்டு வாக்களித்திருப்பதால் யாரை அனுப்புவதென்று கணநேரம் யோஜித்து, கணநாதரே அதற்கேற்றவரென்று முடிவு செய்து, தன்னுடைய சூலாயுதத்தைக் கொடுத்து, அசுரரை அழித்து வெற்றியுடன் திரும்புவாயாக என ஆசீர்வதித் தனுப்பினார். அப்படி செய்வதாய்ச் சொல்லி, அநுக்கிரஹம் பெற்ற அவரும், சிவபெருமானையும், பார்வதி தேவியையும் நமஸ்கரித்து யுத்தத்துக்கு கிளம்பினார்.

இரு சாராருக்கும் கடுமையான போர் நிகழ்ந்தது. பல கரங்கள் வெட்டுண்டு வீழ்ந்தன. பல தலைகள் உருண்டன. பலர் வெருண்டு ஓடினர். கடைசியில் சூலாயுதத்தைப் பிரயோகித்து, கனலாசுரனையும் காலனிடம் அனுப்பினார் கணநாதர். இதையும் ஒற்றர்கள் மூலம் அறிந்த சிந்து யாது செய்வதென்றறியாது திகைத்தான். பிள்ளையார் பிடிக்க குரங்காய் முடிந்ததேயென பிரலாபித்தான். வெந்து வெதும்பினான். சரி. தன் கையே தனக்குதவி. நம்மிடம் கனலாசுரனே எல்லோரையும் விட அதிபராக்ரமம் வாய்ந்தவன். அவனும் போனபிறகு, நாமே நேரில் போவதைத் தவிர வேறு மார்க்கமில்லை யென்றுணர்ந்து, சேனைத்தலைவர்களில் எஞ்சியுள்ளோரை, போருக்கு ஆயத்தமாகக் கட்டளை யிட்டான்.

சிந்துவே, நேரில் போர் செய்ய ஏற்பாடு செய்யும் சமாச்சாரம் தெரிந்த பரமசிவனும், நந்திதேவரை, தூதனாக சிந்துவிடம் அனுப்பி, ஹிதமாகவும், நயத்திலும், பயத்திலும் அவனுக்கு புத்தி சொல்லி, 'தேவர்களுக்கும் அசுரர்களுக்கும், சண்டை வேண்டாம், சமாதானமாக வாழுங்கள். அப்படி அடிககடி சண்டை போடுவதால் அந்தியில் அசுரர்களே அவதிப்பட்டு அழிய நேரும்' என்பதை அறிவிக்கும்படி சொல்லி யனுப்பினார். நந்திதேவரும் சிந்துவிடம் சென்று, ஹிதமான வார்த்தைகளால், எவ்வளவோ சொல்லியும் கேளாமல், கோபத்துடன் குதித்தெழுந்து, நந்திதேவரை இழிவாகப் பழித்து, பேசலானான்.

நந்ததேவர் மிகுந்த பொறுமையுடன் சொல்லிப் பார்த்து கேளாததாலும், பரமசிவனையும், விநாயகரையும் இழிவு படுத்தியதாலும், கோபம் கொண்டவராய், கடைசியில் சிந்துவைப் பார்த்து, 'ஏ! நீசா! நான் ஒருவன் மட்டுமே உன்னையும், இங்குள்ளோர் அனைவரையும் ஒரே நொடியில் நொறுக்கி யெறிந்து விடுவேன் என்று நினை. நான் சாமான்ய தூதனாகவே வந்திருப்பதால் அப்படிச் செய்ய இஷ்டமில்லை, கட்டளையும் கிடையாது. யுத்தம் செய்வதே உன் விருப்பமானால், அத்துடன் அழிந்து போகவும் தயாராய் இரு. போர்க்களத்திலே கணநாதரை சந்திப்பாயாக' என்று சொல்லி விட்டு, திரும்பிவந்து அங்கு நடந்தவைகளை சொன்னார். அவ்விதமாகத் தான் நடக்கும் என்பதை எதிர்பார்த்திருந்த கணநாதரும், நந்திதேவர் சொன்னதை புன் முறுவலுடன் வரவேற்று, பூதகணங்களை போருக்குக் கிளம்ப ஏவினார். ஒரு பக்கம் சிந்து தன் அசுர சைன்யங்களுடன் ரத, கஜ, துரக, பதாதிகளுடனும், கையில் வாளேந்தி வந்து இறங்க, மறுபக்கம் விநாயகர், தம்முடைய பூத கண பரிவாரங்களுடன் சூலாயுத சகிதம் குதிக்க, இருவர்களுக்குள்ளும், கடுமையான யுத்தம் ஆரம்பமாயிற்று. விநாயகர்

அசுரருடைய பல்வகை சேனைகளையும் புறக்கடித்து, கடைசியாக சூலாயுதத்தைப் பிரயோகித்து, அது போய் அவன் மார்பில் பாய அவனும் பூமியில் வீழ்ந்து இறந்தான். அப்பொழுது அங்குள்ள யாவருக்கும் விநாயகர், விஸ்வரூப மளித்தார். தேவாகள் பூமாரி பொழிந்தனர், துந்துபி வாத்யங்கள் முழங்கின, முனிவர்கள் வேதகோஷம் செய்தனர். அந்த விநாயகரை தினமும் வணங்குவோம்.

ஒரு அசுரேந்திரனுக்கும், தேவ இந்திரன் என்னும் தேவேந்திரனுக்கும் யுத்தம் நடந்து, அதில் அசுரேந்திரன் தோற்றுப் போனான். தனது குலகுருவாகிய சுக்ராச்சாரியரை அதற்கு என்ன செய்யலாமென்று கேட்டான். அவர் சொன்னார்:— மாகதமுனி என்ற ரிஷி தவம் செய்து கொண்டிருக்கிறார். உன்னிடமுள்ள அழகில் சிறந்த விபுதை என்னும் அசுர கன்னிகையை அனுப்பி மாகத முனியை மயக்கச் செய்து மணம் புரிந்து கொள்ளச் சொல். அவர்களுக்கு ஓர் பிள்ளை பிறக்கும். அவனால் உன் அவமானத்திற்கு விமோசனம் உண்டு' என்றார். அப்படியே விபுதை, அசுரேந்திரனால் அனுப்பப்பட முனிவரின் ஆசிரமம் அடைந்து, தன்னுடைய சாகசங்களால் அவரைக் காமுறச் செய்து, மணமும் செய்து கொண்டாள். அவ் விருவருக்கும் யானை முகத்தோடு கூடிய கயமுகாசுரன் பிறந்தான். அவனும் தவம் செய்து பரமசிவனிடத்தில் சாகாவரம் பெற்றவன். அதனால் கர்வமடைந்த அவன், தேவர்களையும் தனக்கு குற்றேவல் செய்யும்படி ஆக்ஞாபித்து மதங்கபுரியை ஆண்டுவந்தான். தேவர்கள், தன் சபைக்கு வரும்போதெல்லாம், இரண்டு கைகளையும் இரு காதுகளையும் மாற்றிப் பிடித்துக்கொண்டு, மூன்று தரம் தோப்புக்கரணம் போடும்படியும், தலையில் இருகைகளால் குட்டிக்கொள்ள வேண்டுமென்று உத்தரவிட்டான். தேவர்கள், மஹாசிவனை வேண்ட, அவர், கணபதியை அனுப்ப, அவரும் சென்று கயமுகாசுரனை வென்றார். அவன் இறக்குமுன், தன் சக்தியால் மூஞ்சூறு என்னும் எலியுருவம் கொண்டு, மறுபடி கணநாதரை எதிர்த்தான். அவரும் அவனை கொல்லாது பிடித்து அமுக்கி, அதன்மேல் ஏறி உட்கார்ந்து கொண்டார். தோற்றுப்போன அவன், பிள்ளையாரை, ஒரு வரம் கேட்டான். அதாவது, தன்னை எப்போதும் அவருடைய வாகனமாக இருக்கச் செய்ய வேண்டும் என்று; அவர் அப்படியே செய்வதாய் வாக்களித்து அது முதல் மூஞ்சூறுவை வாகனமாய்க் கொண்டார். தேவர்கள் தங்கள் கஷ்டம் நீங்கியதற்காக, அன்றையிலிருந்து, கயமுகாசுரனுக்குச் செய்த மரியாதையாகிய குட்டிக் கொள்ளுதல், தோப்புக்கரணம் போடுதல், இவைகளை, கணபதிக்கு செய்ய உத்ஸாகத்துடன், இசைந்தனர். அதனாலேயே, கோவில்களில், பிள்ளையார் இருக்குமிடங்களில், பக்தர்கள் தோப்புக்கரணம் போட்டு தலையில் குட்டிக்கொள்ளுகிறார்கள்.

பூஜை, அர்ச்சனை செய்வதற்கும், படங்கள் விக்ரஹங்களுக்கு சாத்தவும் எத்தனையோ விதமான, மல்லிகை, முல்லை, இருவாட்சி, சண்பகம், ரோஜா முதலிய புஷ்பங்கள் இருக்கின்றன. ஆனால் கணநாதருக்கு எல்லாவற்றையும் விட அருகம் புல்லே பூஜைக்கு மிகவும் ஏற்றது. சதுர்த்தியன்று சகலரும் அருகம் புல் கொண்டு அர்ச்சிப்பதைப் பார்க்கலாம். அது ஏன்? அதற்கும் ஒரு கதையும், காரணமும் உண்டு.

எமதர்மராஜனுக்கு அக்னி ஸ்வரூபமான அனலாசுரன் பிள்ளையாகப் பிறந்தான். அவன் கோர ரூபமுடைய அரக்கனாய் மூவுலகையும் எரிக்கக் கிளம்பினான். தேவேந்திரன் விநாயகரை வேண்டினான். அவரும் அவனை உருக்குலைத்து, அக்னி கோளமாக்கி விழுங்கி, வயிற்றின் அடியில் அடக்கிக் கொண்டார். அதுவும், வயிற்றில் எரிச்சலை உண்டாக்கி, கஷ்டப்படுத்த ஆரம்பித்தது. பலவித உபசாரங்களை செய்தும், குளிர்ந்த அமிர்தங்களைக் கொடுத்திட கேட்கவில்லை. கடைசியில் தேக முழுதும் அருகம்புல்லை வைத்து, போர்த்தினார்கள். உடனே சமனப்பட்டது. ஆதலால் அவரை அருகம் புல்லால் அர்ச்சிக்கிறோம்.

பிள்ளையார் கோவிலின் முன் தேங்காய்களை சூறையடிப்பது எதற்கு என்பதையும் சற்று கேளுங்கள். காசிபர் என்ற முனிக்கும் அதிதிக்கும், பிறந்தவர் மகோற்கடர். அவரை விநாயகரின் மறு அவதாரமென்று சொல்லுவார்கள். காசி மகாராஜன் தன் இளவரசன்; மூத்த பிள்ளையுடைய விவாகத்தை நடத்திக் கொடுக்கும்படி காசிபரை வேண்ட, அவர், தான் ஒரு விரதம் அநுஷ்டிப்பதாகவும், தனக்குப் பதிலாக பிள்ளை மகோற்கடரை அனுப்புவதாகவும் சொன்னார். இதைக் கேட்ட காசி ராஜனும் மிகவும் சந்தோஷத்துடன் அவரைக் கூட்டிக்கொண்டு அரண்மனை அடைந்தார். அரண்மனை வாசிகளில் கூடன் என்னும் அசுரன் வாசலை அடைத்துக் கொண்டு பாறை உருவாக நின்றான். அவன் அப்போது அசுரத் தலைவனாயிருந்த நராந்தகனால், மகோற்கடரை, விக்னப்படுத்துவதற்காக அனுப்பப்பட்டவன். அவன் அவ்வாறு வந்திருப்பதை ஊகித்து அறிந்து கொண்ட கணநாதர் (மகோற்கடர்) ஆயிரம் தேங்காய்களைக் கொண்டுவரச் செய்து, அஸ்திர ஆவாகனம் செய்து, சிவபெருமானை பிரார்த்தித்துக் கொண்டு அப் பாறையின் மேல் சூறையிட்டு உடைக்கக் கட்டளையிட்டான். வலி தாங்காது கூடன் உயிரிழந்தான். மகோற்கடர் பூமியை ஸ்தோத்தரிக்க பூமி பிளவுபட்டு அசுரனை தன்னுள் அடக்கிக் கொண்டது. வந்த காரியம் சித்தியானவுடன் மகோற்கடர் இருப்பிடம் சேர்ந்தார். அது முதல் தங்கள் காரிய சித்திக்கு, தேங்காய் சூறையடிப்பதாய் எல்லோரும் வேண்டிக் கொள்ளுகிறார்கள்.

பிரும்மதேவர் சிருஷ்டிகர்த்தா. அவரே விநாயகரை பூஜித்த கதை பின் வருமாறு. தான் சிருஷ்டிக்கும் உருவங்கள், சரியாய் அமையாமல், மாறு ரூபங்களை அடைவதைக் கண்டு பயந்து, அவ் வுருவங்களாலேயே மிகவும் இகழ்ச்சிக்கப்பட்டு, தன் தவறை உணர்ந்து, கணநாதரை தியானித்தார். அவரும் சமுத்திரத்தில் ஆலிலையில் குழந்தை உருவாய்த் தோன்றினார். பிரும்மதேவர் தம் பிழையை பொறுத்தருளும்படி வேண்ட, கணேசரும் அவ்வாறே செய்து, எப்போதும் எக் காரியத்துக்கும் என்னை வணங்கி விட்டு ஆரம்பிப்பாயாக என்று சொல்லி அந்தர் தியானமானார். அதனாலேயே, நாமும் எக் காரியமும் விக்னமில்லாமல் முடிய வேண்டி, முதலில், அவரை ஸ்மரிக்கின்றோம். அப்பேர்ப்பட்ட கணபதியை—விநாயகரை, பிள்ளையாரை—ஆனை முகத்தானை எல்லோரும் பூஜித்து, பலகாலம் பாரினில் மேன்மையுடன் வாழ்வோமாக !!!

"அநுதினமும் நினை நெஞ்சே—நீ
ஆனை முகத்தானை—நீ—அநுதினமும் நினை நெஞ்சே."

# "காதற் கவிதை" (துறைவன்.)



பண்டைத் தமிழன் பெருமை வாழ்வு காதல், வீரமாகிய அடிப் படைகளின்மீது கம்பீரமாக நிமிர்ந்து விளங்கும் பனிக்குக் கோபுரமாகும். காதலின் சக்தி வீரனுக்கு வெறியூட்டியது; தமிழன் வீரம் தெவ்வர்க்கு வெம்மையும் அல்லார்க்கு அன்பும் பயக்கும் அறநெறியினை யுடையது. கடமையைக் கருத்தொடு செய்யத் தூண்டியது காதல், அஃது சாதலுக்கு மார்பைக் காட்டிற்று வீரத்திற்கு இன் முகம் காட்டியழைத்தது.

காதல் மிக்க தலைவியொடு இல்லறம் இனிதுற நடாத்தும் தலைமகன், நாடு காவல், கல்வி பயில்தல், பொருளீட்டல் யாதானுமொரு காரணம் பற்றித் தலைவியைப் பிரிந்து சென்று விடுகிறான். தான் வரும் காலமும் நாளும் சொல்லிச் செல்கிறான் செஞ்சொல் தவறாத தலைவன். அவன் போன நாள் தொட்டு, தலைவி துயர்க்கடலில் தோன்றிய செந்தாமரை போல் உள்ளத்திற் கவலையும் ஏக்கமும் கொண்டு வாடுகிறாள். "சந்திரனது வேகமும் சூரியனது கதியும் எனிப்படி மந்தமடைந்து விட்டன" என்று வருந்துகிறாள். "பருவ காலங்கள் யுகத்துக்கொரு முறைதான் மாறுவனவோ" என ஐயுறுகின்றாள். தலைவனையே நினைந்து நினைந்து வாசலிலேயே அவன் வரவை எதிர்பார்த்து நிற்கிறாள். கற்பின் செவ்வொளி முகத்திலே பொலிய, குழையொடு பொருது நீண்ட குமுதக் கண்கள் தலைவனது வேல் நுனியைப் போலச் சிவந்திருக்க, 'பாட்டை மேல் வைத்த நாட்டமாக' வாட்டமுறுகிறாள் வனிதை. பயனற்றுக் கழியும் ஒவ்வொரு விநாடியும் அவளுக்கு நரகத் தீயிலே கல்ப கோடி வருஷங்கள் போன்றிருக்கிறது...... சற்று கூர்மையாகப் பார்க்கிறாள். தலைவனது மணி நெடுந்தேரின் உச்சி யல்லவா அது! உச்சியின் தரிசனம் அவளை உம்பர் லோகத்து உச்சிக்கே அழைத்துச் சென்று விடுகிறது. தேரின் பின்னாலே ஒரு தூசு மண்டலம்! அந்தத் தூளிகள் மீது அவளுக்கு என்னவோ பொறாமை? தனக்கு முன்னால் தன் கொழுநனைக் கண்டு விட்டன வல்லவா?...............

தலைவனைப்பார்ப்போம்......அடடா, ஊர் நீங்கியபோது வாலிபத்தின் முறுக்கிலே கட்டமைந்த உடலினனாய் கம்பீரமாய்ச் சென்ற களிறு இவன்! காதலியை நினைந்து வேதனை செய்யும் மனம் அவனுடைய தேரின் குதிரை களை..............(?)ப் பார்த்துச் சிரிக்கின்றது சோகத்தோடு. காதலியின் அன்பு நிறைந்த வேற் கண்களும் அருள் நிறைந்து தளிக்கும் பார்வையும் அவன் அகக் கண் முன் தோன்றுகின்றன. "இந்தத் தேர் ஏன் இவ்வளவு மெதுவாக அசைகிறது" என்று வருந்துகிறான். பாகனையும் அடிக்கடி அதட்டி விடுகிறான். "குதிரைகளுக்குத் தீனி போட்டு எத்தனை மாதமிருக்கும்?" என்று சோகம் நிறைந்த ஹாஸ்யத்தோடு பேசுகிறான். பாகன்......பாவம்......"இன்று குதிரை தலை கால் தெரியாமல் கடிவாளம் இற்று விடுமோ" வெனப் பாகன் பயப்பட, குடல் தெறிக்க ஓடுகிறது! "இப்படிச் சொல்கிறானே" என்று அவன் நினைக்கவில்லை. அவனுக்குத் தான் விஷயம் தெரியுமே! மெல்லச் சிரித்துக் கொள்கிறான். அவ்வளவு தான். ஒன்றுந் தோன்றாத தலைவன் ஆகாயத்தை அண்ணாந்து பார்க்கிறான். ஒரு நீலமேகம் இன்னொரு பொன் மேகத்தைத் துரத்தி விளையாடிக் கொண்டிருந்தது நட்சத்திர மலர்களைச் சிதறிக் கொண்டே. இன்னொரு

மேகம்.........மிகவும் கவலையுடன்.........தன்னூர்ப் பக்கமாகப் போய்க் கொண்டிருந்ததைக் கண்டான். காதலின் நீர் விட்டுக் குழைந்திருந்த அவன் மனச்சேற்றில் கவிதைக் கற்பனைகள் முளைத்து எழுகின்றன. அந்த மேகத்தின் வேகத்தைக் கண்டு ஒருகணம் திகைத்து விட்டான்! (காதலனும் பைத்தியக்காரனும், கவிஞனும் ஒன்றென்று யாரோ சொன்னது நினைவு வருகிறதா!) அந்த மேகம்......தன் தேர் ஊரை யடைவதற்குள் அங்கே போய்ச் சேர்ந்து விடும். ஆகவே சொல்லுகிறான் அதைப் பார்த்து,

"ஓடுகின்ற மேகங்காள்! ஓடாத தேரில், வெறுங்
கூடுவருகு தென்று கூறுங்கோ!"

"கத்தைகள் பூட்டிய வொரு தேரிலே, உன் தலைவன்—உன்னைப் பிரிந்ததனால் நெஞ்சக் கூடெல்லாம் பழுப்பழுவாக, இளைத்துக் கவலையுடன் வருகிறான்" என்று......நீங்கள் போகும் பொழுது ஒரு வார்த்தை சொல்லி விடுங்கள்" என்கிறான் தலைமகன். "தலைமகன் என்னை மறந்து விட்டானோ! இன்னும் வரவில்லையே" என்று ஏங்கி நிற்கும் தலைவிக்கு அச்சொற்கள் சிறிது "ஆறுதல் தராதா" என்று தான். காதல் ஆத்திரத்திலே தன் குதிரைகள் உயர்ந்த அராபிக் குதிரைகள் என்பதையும் மறந்து விடுகிறான் தலைவன். சாதாரணச் சொற்களைக் கொண்டு இரண்டே வரிகளில் எவ்வளவோ அதீதமான உணர்ச்சிப் பெருக்கைக் கொட்டி விட்டாரல்லவா, புலவர்!... ........தலைவனது ஓயாத தொந்தரவிலே சலித்துப்போய் விடுகிறான் பாகன். "ஏன் இத்தனை அவசரம்? ஊரில் போய் என்ன தான் பிரமாத காரியம் ஆகப் போகிறதோ! ஊர் தான் வந்து விட்டதே!" என்று கள்ளத்தனமாக ஒரு கேள்வியைப் போடுகிறான் பாகன். தலைவன் பரிகாசமும் கவலையும் கலந்து தோன்றச் சிரிக்கிறான். "தம்பி! உனக்கு......மணமாகி விட்டதா?" என்று பாகனைக் கேட்கிறான். "இல்லை" என்று பதில் வருகிறது. "பின் எப்படி உனக்குத் தெரியப் போகிறது.........உம்......உன்னைப் பெரிய அறிவாளி என்று சொல்கிறார்களே!......அட, பிரகஸ்பதியே .........குதிரையை அடித்து விரட்டு......ஏனு?.........இது தெரியாதா கற்பாகிய ஒற்றைக்காலில் நின்று கொண்டு, கன்னத்தில் ஊன்றிய கையும் சாளரத்திலே தங்கும் தேகமுமாக...வாயிலிலேஎனக்காக எதிர்பார்த்திருக்கும் அந்த அழகைப் பார்க்க வேண்டாமா!" என்று தன்னை மறந்து கற்பனை லோகத்திலே சஞ்சரிக்கிறான் தலைவன். இதோ இருக்கிறது பாட்டு.

நூல்கவின்ற பாக! தேர்கொவ்விதாச் சென்றீக
தேன்கவின்ற கானத்தெழில் நோக்கி—தானவின்ற
கற்புத்தான் வீழ்த்தக் கவுள்மிசைக் கையூன்றி
நிற்பாள் நிலையுணர்கம் யாம். (முத்தொள்)

(கொவ்விதா—விரைவாக, கவுள்—கன்னம்.)

தன்னைப் பிரிந்து வாடும் தலைவியின் நிலையை தலைவனுள்ளம் கற்பனை செய்கிறது தெரிகிறதா! தான் பிரிவேனென்று கூறியபோழுதே அவளது சூழ்குழலின்றும் மலர்கள் கீழே விழுந்து விட்டனவே! அவள் உயிர் வைத்துக் கொண்டிருந்ததே மிகக் கடினம். அவள் உடம்பு அசைந்ததெல்லாம் அவள் கற்பின் பலத்தினாலேயே யன்றி உடற் பலத்தினாலல்ல. காதலின் வயப்பட்ட தலை மகளின் உள்ளக்கிடக்கையை உள்ளபடியே வெளியிடும் இக் கவிதைத் துணுக்கில் ஓசை நயமும் ஊடுருவி நிற்கிறதல்லவா!

# அரசியற் சகோதரிகள்

(உ. பீ. உசேன்மீர்.)

ஒரு குடும்பத்திற் பிறந்த சகோதரிகளே, ஒரு நாட்டின் தலைசிறந்த அரசியல் தலைவர்களின் மனைவியராய் அமைந்து, அந்நாடு புத்துயிரும் புது வாழ்வும் பெற அரசியலிலும் ஈடுபட்டு உழைத்து வருகின்றனரெனின் அது பாராட்டிப் போற்றத்தக்க தன்றோ? இத்தகைய இயல்பு வாய்ந்த சகோதரிகள் சீன அரசியல் தலைவர்களின் மனைவியராய் விளங்குவதைக் காணலாம்.

இதுகாலை சீன நாட்டின் தலைவராய் விளங்கும் தளபதி சியாங்கே-ஷேக்கின் துணைவியார் ஸ்ரீமதி சியாங்கே-ஷேக்கும், அந்நாட்டின் பொருளாதார அமைச்சரின் மனைவியார் ஸ்ரீமதி கங்கும், சுதந்திரச் சீனாவை உருவாக்கிய சிற்பியும் இணையற்ற வீரனுமாகிய டாக்டர் சன்யாட்சென்னை மணந்த மங்கை ஸ்ரீமதி சன்யாட் சென்னும் ஒரு குடும்பத்திற் பிறந்த சகோதரிகளாவர். அவர்களின் இயற் பெயர் முறையே மெய்லிங், எய்லிங், சிங்லிங் என்பன. இன்று சீன தேசம் உலகத்திலுள்ள சுதந்திர நாடுகளின் மத்தியிலே கௌரவத்துடன் தலை நிமிர்ந்து நிற்க இம்மூன்று சகோதரிகளும் அவர் தம் சகோதரர் டி. வி. சூங்கும் செய்துள்ள சேவையும் தியாகமும் சரித்திரப் பிரசித்தமானவை.

இவர்கள் தந்தையார் சிறந்த கல்விமான். அமெரிக்க நாட்டிலே மேனாட்டு முறையிற் கல்வி பயின்றவர். தாயார் ஓர் ஆசிரியை. மிக்க அழகு வாய்ந்தவள். இவர்களுக்கு மூன்று பெண்களும் மூன்று ஆண்களுமாக ஆறு குழந்தைகள் பிறந்தன. அவர்களில் மூத்த மகனும் மூன்று பெண்களுமாகிய நால்வர் அமெரிக்காவிலே கல்வி பயின்று உயர்ந்த பட்டங்கள் பெற்றனர்.

## எய்லிங்

டாக்டர் சன்யாட்சென் அக்குடும்பத்தாருடன் நெருங்கிப் பழகும் தொடர்பு கொண்டிருந்தார். அவர் அடிக்கடி அவர்கள் வீட்டிற்குச் சென்று உல்லாசமாக உரையாடி மகிழ்வார். ஆகையால் அவர்கள் அப்பெரியாரின் அன்பையும் ஆதரவையும் பெற்றிருந்தனர். டாக்டர் சன்யாட்சென் ஜப்பான் தேசம் சென்ற காலத்திலே மூத்த பெண்ணாகிய எய்லிங்கைத் தம் காரியதரிசியாக அழைத்துச் சென்றிருந்தார். அங்குதான் டாக்டர் கங்கைச் சந்தித்தது. அவர்பால் காதல் கொண்டாள் எய்லிங். அவர்களிடை தோன்றிய காதல் அரும்பு கடிமணமாய் மலர்ந்தது. ஸ்ரீமதி-கங் தீவிரமான காரியவாதி. சிறந்த அரசியல் ஞானமும் படைத்தவள். தம் கணவருக்குப் பெருந் துணையாய் அமைந்து அரசியற் காரியங்களில் உதவி புரிந்து வருகிறாள். பொருளாதார அமைச்சராகிய டாக்டர் கங் வேறு அரசியல் காரியங்களின் நிமித்தம் நாங்கிங்கில் தங்கிய காலங்களிலே ஷாங்காயில் ஸ்ரீமதி. கங்கே அநேக பொருளாதாரப் பிரச்சினைகளைத் திறமையுடன் கையாண்டு வந்திருக்கிறாள்.

## சிங்லிங்

டாக்டர் சென், தம் தந்தையாருடன் உரையாடிக் கொண்டிருப்பதை சிறுமியாகிய சிங்லிங் மிக்கக் கவனத்துடன் கேட்டுக்கொண்டிருப்பாள். அப்பொழுதே டாக்டர் சன்யாட்செனின் உயர்ந்த தத்துவங்கள் அவளது மனதைக் கவர்ந்தன. புரட்சியின் மூலமாகத்தான் சீன நாட்டிற்கு விமோசனம் ஏற்பட முடியும் என்ற முடிவு அவள் மனதிற் பசுமரத்தாணியே போல் பதிந்துவிட்டது. அவள் அமெரிக்காவிலே கல்வியில் தேர்ந்து பட்டம் பெற்று தாய்நாடு திரும்பும் வழியிலே தன் சகோதரியாகிய எய்லிங்கைச் சந்திக்க ஜப்பானிலே தங்கினாள். டாக்டர் சன்யாட்சென் அப்பொழுதும் ஜப்பானிலேதான் இருந்தார். அவர்பால் சிறு பிராயம் முதற் கொண்டே பற்றுக்கொண்டிருந்த சிங்லிங் தமக்கையுடன் சேர்ந்து அவரது காரியதரிசியாகப் பணியாற்ற முற்பட்டாள். இக்காலத்திலே தான் இளம் பருவத்தே அவள் புரட்சியைப் பற்றிக் கொண்டிருந்த எண்ணங்களெல்லாம் உருப்பெற்று வளர்ந்தன. டாக்டர் சான்யாட் சென்னுக்கு ஆலோசனை கூறுபவளாகிய அவள், அரிய துணைவியாகவும் அமைந்தாள். டாக்டர் சிங்லிங்கைக் காட்டிலும் இருபத்தேழு ஆண்டுகள் வயதில் மூத்தவரெனினும் இருவரும் கொண்டிருந்த ஒத்த உணர்ச்சியும் ஓங்கிய அன்பும் அவர்கள் வாழ்க்கையில் இளமையும் எழிலும் நிறைந்த இன்பக் காதலாய்க் கனிந்தன. அவர்கள் இருவரும் ஒன்றுபட்டு ஒன்பதாண்டுகள் சீன நாட்டின் மேம்பாட்டிற்காக இடையறாது உழைத்து வந்தனர்.

பொதுவுடைமை நோக்கம் கொண்ட இணையற்ற கோமிங்டாங் கட்சியின் அற்புதச் சரித்திரத்தை நிகழ்த்தியவர்கள் அவர்களே முதலில் தன்னை விளம்பரப்படுத்திக் கொள்ளாமல் மறைவாகவே தீவிர தேசப்பணியாற்றி வந்தாள் சிங்லிங். ஆனால் கணவன் இறந்தபின் அவரது உயரிய இலட்சியத்தை நிறைவேற்றும் கடமையை உணர்ந்தனளாகையால் நேர்முகமாகவே வேலை செய்ய முனைந்தாள். தம் கட்சியைப் பலம் பொருந்தியதாய் அமைத்தும் அதன் கொள்கைகளை விளக்கி பிரசங்கம் செய்தும் நாடெங்கும் சுற்றிச் சலியாது உழைத்தனள்.

இளந் தலைவர்களாகிய சியாங்கே ஷேக்கும் டி. வி. சூங்கும் தமது ஏனைய நண்பர்களுடன் சேர்ந்து கொண்டு வெளிநாட்டு ஆலோசனையாளர்கள் அனைவரையும் சீன நாட்டினின்று வெளியேற்ற வேண்டும்; முக்கியமாய் மாஸ்கோவின் தொடர்பை முற்றிலும் அறுத்துவிட வேண்டுமென முடிவு செய்தனர். இச்செயலால் தம் கணவரின் லட்சியங்களுக்கு அவர்கள் துரோகம் செய்கின்றனர் என்பதை உணர்ந்தாள் சிங்லிங். உடனே அந்நாட்டினின்றும் வெளியேறிச் சென்று மாஸ்கோவில் வசித்துவரலானாள். தமது சகாக்களால் கைவிடப்பட்ட அந்நிலையிலும் தம் லட்சியத்தின்பாற் கொண்ட மாறாத உறுதிப்பாட்டினால் குன்றாத் தைரியங்கொண்டாள் சிங்லிங். தமக்கு நியாயமெனப்பட்ட கொள்கையின்பால் உண்மையுடன் நிலை நின்று போராடினாள். பின்னர் அவள், ஜப்பானியர் சீனாவைத் தாக்கியவுடன் சியாங்கே-ஷேக் பொதுவுடைமைத் தலைவர்களுடன் சமாதானம் செய்து கொண்டு பொது எதிரியை எதிர்க்க உடன்பட்டபோதுதான் தாய் நாடு திரும்பினாள்.

சீன மக்களின் மதிப்பிற்குரிய வீரனின் மனைவி யென்ற முறையில், பொது மக்களின் மத்தியிலே அவளுக்கு அதிக செல்வாக்குண்டு. அவளும் அதற்கேற்பவே தம் கணவனின் கொள்கையை நிலைநாட்டச் சலியாது உழைத்து வருகிறாள். சிங்லிங் தமது தந்தையின் உயர்ந்த நோக்கங்களும் சிறந்த கற்பனாசக்தியும் கொண்டவளாய் தாயின் தீவிர உணர்ச்சியையும் சிறந்த அழகையும் பெற்று விளங்குகிறாள்.

## மேய்லிங்

ஸ்ரீமதி. சியாங்கே–ஷேக்காகிய மெய்லிங் தம் அக்காளைப்போல சிறந்த அழகியல்ல வெனினும் தோற்றப் பொலிவினாலும் கூர்த்த மதியினாலும் மக்களின் மனதைக் கவரும் சக்தி வாய்ந்தவள். அவள் இருபத்தோராம் ஆண்டிலேயே கல்லூரிப் படிப்பை முடித்து தாய் நாடு திரும்பினாள். முதலில் சமூகச் சீர்திருத்தத்திலேயே ஈடுபட்டுழைத்தனள். எனினும் அரசியல் விவகாரங்களில் தலையிடாதிருக்க அவளால் முடியவில்லை. ஆதலால் இளந் தலைவன் சியாங்கே-ஷேக்குடன் நெருங்கிப் பழக நேரிட்டது. அவ்விளைஞன் அவள்பால் காதல் கொண்டவனாய்த் தம்மை மணந்துகொள்ளுமாறு அவளை விரும்பி வேண்டினான். அவளும் அவனை நேசித்தாளெனினும் மணம்புரிந்துகொள்ள முதலில் மறுத்தனள். ஏனெனில் அவன் கிருஸ்தவன் அல்ல. பின்னர் கிருஸ்துமதக் கோட்பாடுகளைக் கற்றுணர்ந்து சியாங்கே-ஷேக் அம்மதத்தைத் தழுவவே 1927-ம் ஆண்டு இருவருக்கும் திருமணம் நிகழ்ந்தது.

அன்று முதல் மெய்லிங் தம் கணவருக்கு முதுகு எலும்புபோன்ற ஆதாரவாய் அமைந்து துணைபுரிந்து வருகிறாள். கணவனின் கருத்துக்களைக் காரியமாய் நிறைவேற்றுபவள் அவளே. மேனாடுகளின் போக்கைத் தம் கணவனுக்கு எடுத்து விளக்குபவளும் சீனாவின் நிலையை மேனாட்டினருக்கு விளக்கிக் காட்டுபவளும் அவளே. 1937-ம் ஆண்டு சிறைப்படுத்தப் பட்ட தம் கணவனை மீட்க அவள் காட்டிய சாகசத்தைச் சரித்திரம் புகழ்கிறது.

ஜப்பானியர் தொடுத்துள்ள இப்போர் ஸ்ரீமதி-சியாங்கே-ஷேக் இயற்கையாய்ப் பெற்றுள்ள அரிய ஆற்றல்கள் வெளிப்பட சிறந்த சந்தர்ப்பமாய் அமைந்துள்ளது. அவளது இயக்கங்களைத் தோற்றுவிக்கும் வன்மையையும் காலத்திற்கேற்ற திட்டம் வகுக்கும் திறனையும் தக்க தலைவர்களைத் தேர்ந்தெடுத்து அவற்றை நடத்துவிக்கும் பெற்றியையும் கண்டு உலகமே வியக்கிறது.

சீன நாட்டு அரசியல் வானத்திலே மங்காது ஒளி வீசும் தாரகைகளாம் இந்த அரசியற் சகோதரிகள் நம் நாட்டு நாரிமணிகளை நோக்கி,

"பட்டங்க ளாள்வதும் சட்டங்கள் செய்வதும்
பாரினிற் பெண்கள் நடத்த வந்தோம்
எட்டும் அறிவினில் ஆணுக்கிங்கே பெண்
இளைப்பில்லைகா ணென்று கும்மியடி"

என இன்னிசைக் கீதம் மிழற்றிக் குதூகலத்துடன் கூவி யழைக்கின்றனர். நம் பாரத தேவிகள் அளிக்கும் பதில் யாதோ?

# இளமைச் சித்திரம்

(P. அரங்கசாமி.)

உலக மக்கள் ஒவ்வொருவரும் தத்தம் வாழ்நாட்களில் அனுபவிக்கும் இன்பங்களில் பெரும்பாலன இளமைக்காலத்தேயாம். அவ்விளமைக் கால இன்பங்கள் எல்லாம் ஒரு நிகரன அன்று. இளமைப் பருவத்தில் ஆண் பெண் என்ற வேறுபாடு இல்லாமலேயே இருபாலரும் ஒருங்கே கூடி விளையாடி ஒத்த இன்பம் அனுபவித்து மகிழ்வுறுகின்றனர். அஃது தொன்றுதொட்டு இன்றளவும் உள்ள தொன்றாம். பத்து அல்லது பதினைந்து வயது வரையிலும் ஆண், பெண் இருபாலரும் வேறுபாடின்றி விளையாடுகின்றனர். விளையாட்டுக்களிலும் எத்தனை விதம் தான்? பிள்ளைத் தமிழிற்குரிய இலக்கணங்கள் 'சிற்றில் சிதைத்தல்' 'சிறுதேர் ஊர்தல்' என்பனவெல்லாம் இருபாலர்க்குமுரிய பொது விளையாட்டுக்களேயாம். இவ் விளையாட்டுக்களின் மூலம் இருபாலரும் இணையற்ற இன்பம் அனுபவிக்கின்றார்களன்றோ?

ஏன்? இன்றும் குக்கிராமங்களுக்குச் சென்றால், இளமைசான்ற இருவகுப்பினரும் ஒருங்கு சேர்ந்து 'வீடு கட்டி விளையாடுதல்' 'கூட்டாஞ்சோறு ஆக்குதல், 'பொம்மைக் கல்யாணம் செய்தல்' முதலிய விளையாட்டுக்கள் விளையாடுவதைப் பார்க்கலாம்.

ஆயினும், ஆண் இளைஞர்கள் விளையாடும் விளையாட்டுக்கள் சற்று சேஷ்டை-குறும்பு நிறைந்தவைகளாகவே இருக்கும். ஆபத்தானவைகளும் கூட. 'பாரி கோடு' விளையாடுதல், சடுகுடு விளையாடுதல்,' கிட்டிப்புல் விளையாடுதல், தண்ணீரில் குதித்து நீந்துதல் முதலியவெல்லாம் சற்று குறும்பு நிறைந்த விளையாட்டுகளல்லவா? இளமைப் பருவமெல்லாம் மனதுக்கு இன்பம் அளித்துக் கழிதல் இயற்கையேயாம். 'வாலிபம் குரங்குச் சேட்டை' என்பது வழக்குரை யன்றோ? ஒருவன் தன் வாலிபத்தில் தன் மனம் போனவாறு துள்ளி விளையாடி, அதனால் அடையும் இன்பங்களையும், துன்பங்களையும்; வாழ்நாளின் பிற்காலத்தில் உள்ள நிலைமையையும் அமைதியுடன் ஆலோசித்துப் பார்த்தால் இளமைக் காலத்தில் தான் விளையாடிய குறும்பு நிறைந்த சில விளையாட்டுக்களை எண்ணி ஒரு புறம் மனத்தாங்கலும், ஒரு புறம் பெண்களோடு கூடி வேறுபாடில்லாது விளையாடினோமே என்று எண்ணும்போது சிறிது நாணமும் மாறி மாறி வருவது இயற்கையேயாம்.

இளமைப் பருவத்தில் நாமும் ஓடியாடி குறும்பு நிறைந்த விளையாட்டுகள் விளையாடியிருக்கின்றோம். ஆனால் நாம் விளையாடிய விளையாட்டுக்களையெல்லாம் படம் பிடித்துக் காட்டுவதுபோல்-சித்திரம் எழுதுவதுபோல் ஒன்றாகச் சேர்த்து அழகுபடக் கூறுதல் நமக்குச் சற்று கடினம் தான். ஆனால், சங்கப் புலவர்களுள் ஒருவராகிய 'தொடித்தலை விழுத்தண்டினார்' என்ற ஆசிரியர் புறநானூற்றில் தன் இளமைக்கால செயல்களையும், முதுமைக்கால நிலையினையும் சித்திரித்துக் காட்டியிருக்கின்றார். எங்ஙனம்? "பக்குவமான-வாலிபம் நிறைந்த இளமைக்காலம். இவ்விளமைப் பருவத்தில் மணலிடத்து வண்டல் மண்ணால் செய்யப்பட்ட பாவைக்கு—

பொம்மைக்கு, அங்கு பூத்திருந்த பூக்களைக் கொய்து மாலையாகக் கட்டி, அப் பொம்மைக்குச் சூட்டியும், அங்கு குளித்துக் கொண்டிருந்த இளம் பெண்களோடு—தன் வயதொத்த மகளிரொடு கைகோத்துத் தழுவி தண்ணீரில் விளையாடிக்கொண்டும், ஆற்றின் கரையோரத்தில் ஓங்கி வளர்ந்த மரத்தின் கிளைகள் தண்ணீரின்மேல் தாழ்ந்து நிற்கின்றன. அக் கிளைகளில் மற்றும் சில தோழர்களோடு ஏறி, கரையில் நிற்பவர்கள் வேடிக்கைப் பார்க்கும் படியாக ஒருவர்பின் ஒருவராகக் குதித்தும், ஆழத்தில் மூழ்கி மண் எடுத்து கரையில் நிற்பவர்களுக்குக் காட்டியும் விளையாடிக் கொண்டிருந்த அந்த கல்வி யறிவில்லாத இளமைக்காலம் எங்கு சென்றதோ? நினைக்கும் தோறும் இரக்கமாகின்றது. இப்பொழுதோவெனில், இருமல் வந்து விட்டது, வார்த்தைகள் குழறுகின்றன, கையில் பூண் கட்டப்பட்ட பெரிய தண்டை—தடியை ஊன்றிக்கொண்டு நடக்கும் நிலைமை வந்துவிட்டது. ஆ! என்ன இளமைக்காலம்? முதுமைக்காலம் தான் என்ன?" என்ற இவ் விளமைக்கால வருணனையை,

"இனி நினைந்து இரக்க மாகின்று திணிமணற்
செய்வுறு பாவைக்குக் கொய்பூத் தைஇத்
தண்கய மாடு மகளிரொடு கைபிணைந்து
தழுவுவழித் தழீஇத் தூங்குவழித் தூங்கி
மறையென லறியா மாயமி லாயமொடு
உயர்சினை மருதத் துறையுறத் தாழ்ந்து
நீர்நணிப் படிகோ டேறிச் சீர்மிகக்
கரையவர் மருளத் திரையகம் பிதிர
நெடுநீர் குட்டத்துத் துடுமெனப் பாய்ந்து
குளித்து மணற்கொண்ட கல்லா விளமை
அளிதோ தானே யாண்டுண்டு கொல்லோ
தொடித்தலை விழுத்தண் டூன்றி நடுக்குற்
றிருமிடை மிடைந்த சிலசொல்
பெருமூ.தாளரே மாகிய வெமக்கே." (புறம் 243)

என்ற அழகு நிறைந்த பாட்டால் நமக்கு இளமைப் பருவ நிலையினை சித்திரித்துக் காட்டுகின்றார் அல்லவா?

இவர் தம் இளமைக்கால வருணனையைக் காட்டிலும் முதுமைக்கால வருணனையில் கூறப்பட்டுள்ள தண்டை—தடியை 'தொடித்தலை விழுத் தண்டு' அஃதாவது "பூண் கட்டப்பட்ட தலையினையுடைய பெரிய தண்டு" என்று சிறப்பித்துக் கூறியவதனால், இவருக்கு 'தொடித்தலை விழுத்தண்டினார்' என்ற சிறப்புப்பெயரே வழங்கலாயிற்று.

# நகைச் சுவை

(ர. பா. மு. கனி.)

நாம் ஏன் சிரிக்கிறோம்? இது ஒரு நகைக்கத்தக்க கேள்வி என்று நினைக்கிறீர்களா? எங்கே பார்க்கலாம். நாம் ஏன் சிரிக்கிறோம்? பதில் சொல்லுங்கள். யாராவது விநோதமாக, வேடிக்கையாக ஒன்று சொன்னால் நாம் சிரிக்கிறோம் என்கிறீர்கள். இதோ பாருங்கள்! நம் நண்பன் ஒருவன் வழுக்கி விழுந்து விட்டான். எவ்வளவோ நீங்கள் சிரிப்பை அடக்கிப் பார்க்கிறீர்கள். கடைசியில் வாய்க்குள்ளாவது சிரித்தே விடுகிறீர்கள். காரணமென்ன? திரும்பவும் யோசிப்போம். உங்களில் அநேகர் ஆங்கில எழுத்தாளர் டிக்கன்ஸ் எழுதிய 'பிர்விக் பேப்பர்ஸ்' படித்திருப்பீர்கள். அதை வாசிக்கும்போது உங்களை அறியாமலே சிரித்திருப்பீர்கள். காரணமென்ன? அவர் நகைச்சுவை ததும்ப எழுதுகிறார் என்ற பதிலைக் கொடுக்க வேண்டாம். காரணம் இது தான். அவர் வாழ்க்கையைத் தலை கீழாகப் படம் பிடித்திருக்கிறார். அது தான் நகைச் சுவையை உண்டாக்கி விடுகிறது. இப்பொழுது தெரிகிறதல்லவா நாம் ஏன் சிரிக்கிறோம் என்பதின் பதில்? ஆமாம். நாம் எது உலக இயற்கை என்று நினைக்கிறோமோ அதற்கு மாறுதலாக ஒரு விஷயம் நடந்தால் நாம் சிரிக்கிறோம். மனிதன் வழுக்கி விழுவது இயற்கை. இருந்தாலும் நம்மைப் போல் நம் நண்பனும் நடந்து வரவேண்டும் என்பது நம் மனதில் உள்ள எண்ணம். அதற்கு மாறுதலாக அவன் தவறி விழுந்து விட்டால் நமக்குச் சிரிப்பு வருகிறது. அது போல் ஒரு விஷயத்தை சாதாரணமாக எப்படிச் சொல்ல வேண்டுமென்று நினைக்கிறோமோ அதற்கு மாறாக அதே விஷயத்தையே வேறொரு வழியில் சொன்னால் நமக்குச் சிரிப்பு வருகிறது. உதாரணமாகப் பெருத்த வயிறை உடைய ஒருவனை நாம் பெரு வயிறன் அல்லது சட்டி வயிறன் என்போம். அதற்கு மாறாகத் "தும்பிக்கை யில்லாப் பிள்ளையார்" என்றால் நமக்குச் சிரிப்பு வருகிறது.

சரி. நகைச்சுவை என்றால் என்ன என்பது நமக்குத் தெரியும். வாய் விட்டுச் சிரிக்கச் செய்வது தானா நகைச்சுவை? இல்லை. மனதிற்குள்ளேயும் நகைச்சுவை நம்மை மகிழச் செய்யும். புன் முறுவலாகச் சிரிக்கவும் வைக்கும். வாய் விட்டுச் சிரிக்கச் செய்வது அல்லது வயிறு குலுங்க நகைக்க வைப்பது ஒரு வகை ஹாஸ்யம். அவ்வளவு தான். இன்னொரு விஷயம். ஒரு பெரியவர் கூறுகிறார், வாய் விட்டுச் சிரிப்பவனை விடப் புன் சிரிப்பாகச் சிரிப்பவன் நகைச் சுவையை நன்கு அனுபவிக்கிறான் என்று. நீங்கள் இதை அனுபவத்தில் பாருங்கள்.

நகைச் சுவை எப்பொழுது வெளிவருகிறது? எதை எல்லாம் நகைச் சுவையில் வெளியிடலாம்? நகைச்சுவை பொதுவாக உற்சாகத்தில், சந்தோஷமாக இருக்கும் போது மட்டும் வெளிவருகிறதென்பதில்லை. சந்தோஷ சமாச்சாரங்கள், வேடிக்கையான விஷயங்கள் இவற்றைத் தான் ஹாஸ்யமாக வெளியிட முடியுமென்பதில்லை. நகைச்சுவை எந்தச் சமயத்திலும் வெளிவரும்; எவ்விதமான உணர்ச்சியையும் வெளியிடும். ஏக்கத்தை, வருத்தத்தை, ஏமாற்றத்தை, பரிதாசத்தை எல்லாவற்றையும் ஹாஸ்யத்திலே வெளியிடலாம். தமிழ் இலக்கியத்தில் கபிலர் முதல் கம்பன் வரையும்

நகைச் சுவையைக் கையாண் டிருக்கின்றனர். பிற்காலத்தே நகைச்சுவை கொண்ட தனிப் பாடல்கள் பல பாடப்பட் டிருப்பதையும் பார்க்கிறோம். ஆகவே சந்தோஷம், புகழ்ச்சி முதலியவை தவிர மற்றவற்றையும் ஹாஸ்யமாகக் கூற முடியும் என்பதற்கு ஒரு மூன்று உதாரணங்கள் கூறி முடிப்போம்.

1. ஏக்கம்:—ஒரு வீர சைவப் புலவர். வைணவர்களைக் கண்டாலே பிடியாது. பெருமான் கோயில் தப்பித்தவறி எதிர்ப்பட்டு விட்டால் அங்கு நின்று நாலு வார்த்தை திருமாலை நிந்திக்காமல் போகமாட்டார். அத்தகைய புலவர் ஒரு நாள் கன்னபுரம் என்ற ஊருக்குப் போயிருந்தார். ஒரு திருமால் கோயிலைக் கண்டு அப் பக்கம் சென்றார். திருமாலுக்கு இவர் வரும் நோக்கம் தெரிந்து விட்டது போலும். கோயிற் கதவு அடைத்துக் கொண்டது. வெளியே நின்ற புலவர் யோசித்தார். திருமாலைப் புகழ்ந்து பாட ஆரம்பித்து விட்டார்.

'கன்னபுரமாலே கடவுளிலு நீயதிகன்'

"கன்னபுரத்துத் திருமாலே! எம் கடவுளாம் சிவனை விட நீ பெரியவன்" என்றார். கபாடம் திறந்தது. உடனே புலவர் பாட்டைத் தொடர்ந்து திருமாலைக் கிண்டல் செய்ய ஆரம்பித்து விட்டார். "ஆனால் உம்மை விட நான் பெரியவனாக்கும்" என்கிறார்.

'உன்னிலுமோ யானதிகன்'

இவ்வாறு பாடிய உடனேயே கோயில் கதவு எங்கே மீண்டும் அடைத்துக் கொள்ளுமோ என்று அவசரமாகவே பாட்டை முடிக்கிறார்.

'ஒன்று கேள்—முன்னமே உன் பிறப்போ பத்து உயர் சிவனுக் கொன்றுமில்லை என் பிறப்போ எண்ணத் தொலையாதே?'

"ஒரே ஒரு விஷயம். கதவை மூடுமுன் அதையும் கேட்டு விடு" என்று ஆரம்பித்துத் தன் கூற்றின் காரணத்தைக் கூறுகிறார். "முன்னால் நீ பத்து அவதாரந்தானே எடுத்தாயாம். அதாவது பத்துத்தடவை தானே பிறந்தாயாம். சிவனுக்கு ஒரு பிறப்புக் கூடக் கிடையாதாமே. ஆனால் எனக்கு எத்தனை பிறப்புக்கள் தெரியுமா? அடேயப்பா! அதை எண்ணியே தொலையாது." பாட்டு முழுவதையும் படியுங்கள்.

"கன்னபுர மாலே! கடவுளிலு நீயதிகன்
உன்னிலுமோ யானதிகன் ஒன்றுகேள்—முன்னமே
உன்பிறப்போ பத்து உயர்சிவனுக் கொன்றுமில்லை
என்பிறப்போ எண்ணத் தொலையாதே."

இதில் புலவர் எதை வெளியிடுகிறார்? முதலாவதாகத் திருமாலைக் கிண்டல் செய்வதாக நமக்குப் படுகிறது. அடுத்தபடியாகச் சிவனின் பெருமையைப் பேசுவதாகத் தெரிகிறது. இவற்றிற் கெல்லாம் மேலாக அவர் இதில் வெளியிடும் உணர்ச்சி ஏக்கம். 'பிறவியாகிய பெருங்கடலை எவ்விதம் கடக்கப் போகிறேனோ? என்ற ஏக்கந்தான் அது. கடைசி அடியில் அது எவ்வாறு பிரதி பலிக்கிறதென்று பாருங்கள்!

2. வருத்தம்:—ஒரு புலவர் காட்டு வழியே போய்க் கொண்டிருக்கிறார். கையில் கட்டுச் சாதமூட்டை யொன்றிருக்கிறது. பசி அதிகமாய் விட்டது. ஒரு ஓடையைப் பார்க்கிறார். அதன் கரையில் கட்டுச் சாத மூட்டையை வைத்து விட்டுக் கால் கை சுத்தி செய்யச் செல்கிறார். அப்போது அவ் வழியாக வருகிறது ஒரு நாய். சாத மூட்டையை வாயில் கௌவுகிறது; எடுக்கிறது ஓட்டம். புலவர் வந்தார். மூட்டையைத் தேடினார். தூரத்தில் ஓடும் நாயின் வாயில் அதைக் கண்டார். பசியில் அதை விரட்டவும் சக்தியில்லை. வயிறோ நெருப்பை வைத்துக் கட்டியது போல் காந்துகிறது. அப்படி யிருந்தும் அவர் தன் நிலையை ஒரு பாட்டாகவே பாடுகிறார் (தற்கால சினிமாப் பாத்திரம் போல.)

'சீராடையற்ற வைரவன் வாகனஞ் சேரவந்து
பாராரு நான்முகன் வாகனத்தன்னை முன்பற்றிக்கௌவி
நாராயணனுயர் வாகனமாயிற்று; நம்மை முகம்
பாரான் மைவாகனன் வந்தேவயிற்றினிற் பற்றினனே?'

[வைரவன் வாகனம்—நாய். நான்முகன் வாகனம்—அன்னம் (இங்கே அன்னமாகிய சாதம்.) நாராயணனுயர் வாகனம்—கருடன் (கருடன் போல் பறந்து விட்டது.) மைவாகனன்—அக்கினி பகவான் (வயிறு நெருப்புப் பற்றியது போல் பசியால் காந்த லெடுத்ததாம்.)]

நாம் தான் இதைப் படித்த உடன் சிரிக்கிறோம். புலவர் இதைச் சிரித்துக் கொண்டா பாடி யிருப்பார்? 'வயிற்றெரிச்சல்' என்று சொல்கிறோமே, உண்மையாக இந்தப் புலவர் அதோடு தான் இந்தப் பாட்டைப் பாடி யிருக்கவேண்டும்.

3. பரிகாசம்:–பாணன் ஒருவன் ஒரு வீட்டிலிருந்து சத்தமிட்டுப் பாடினான். மறுநாட் காலையில் பக்கத்திலிருந்த இன்னொரு வீட்டிற்குப் போனான். அது ஒரு கோயில் தாசியின் வீடு.* அவளுக்குப் பாணனை நன்றாகத் தெரியும். பாணனுக்குத் தான் முதல் நாளிரவு பாடியதை அவள் கேட்டாளா, அதைப்பற்றி என்ன அபிப்பிராயம் கொண்டிருக்கிறாள் என்பதை அறிய ஆவல். அவன் எதிர் பார்த்தது போலவே அவன் நுழைந்த உடனேயே அவள் அதைப் பற்றி பிரஸ்தாபித்து விட்டாள்:

'ஈட்டுபுகழ் நந்தி பாண! நீ எங்கையர்தம்—வீட்டிருந்து பாட'

என்று ஆரம்பிக்கிறாள். பாணனுக்குத் தன் இசையின் இனிமையை அவளும் அனுபவித்திருக்கிறாள் என்ற மகிழ்ச்சி யுண்டாகிறது. ஆனால் பின்னால் அவள் சொன்னவற்றைக் கேட்ட உடன்தான் விளக்கெண்ணெய் குடித்தவன் எப்பமிடும் போது முகத்தை வைத்துக் கொண்டிருப்பது போல் ஆய்விட்டது அவன் முகம்.

'விடிவளவும்—காட்டிலழும்—பேயென்றா(ள்) அன்னை, பிறர்நரி யென்றார், தோழி-நாயென்றா(ள்), நீ என்றே(ன்) நான்?'

“என் தாய் காட்டில் பேய் அழுகிறதென்றாள். என் வீட்டிலிருந்த மற்றவர்களோ சந்தேகமில்லாமல் 'நரி தான் ஊளை யிடுகிறதெ'ன்றனர். இவர்களை யெல்லாம் விட என் தோழி இருக்கிறாளே அவளுக்கு ரசிகத் தன்மை அதிகம். அவள், 'இது நாயின் குரல் தான்' என்று ஒரு போடு

# சிவராமன்

## (L. V. S. மணியன்)

சிவராமன், சுந்தர கனபாடிகளின் ஏகபுத்திரன். கட்டு குடுமி. கடைந்தெடுத்த மூக்கு. மா நிறமாயிருந்தாலும் கட்டழகிகளின் மனதைக் கவரத் தகுந்த வசீகரமான முகம். அதை இன்னும் அழகுபடுத்தியது காதிலிருந்த வெண்ணிற கடுக்கன். சுமார் ஐந்தரை அடி உயரம். பருமனுமில்லை; ஒல்லியுமில்லை. எப்பொழுதும் சிரித்த முகம். சிவராமன் என்றாலே அவ்வூரில் உள்ளவர்கள் எல்லோருக்கும் ஒரு அலாதி பிரியம்.

சுந்தர கனபாடிகளுக்கு வெகு நாட்களாக புத்ர பாக்கியமில்லை. நல்ல வைதீகப் பிராமணன். வயது ஆக ஆக மகப்பேறு இல்லையே என்ற கவலை அதிகரித்தது கனபாடிகளுக்கு. தனது ஜாதகத்தையும், தனது சகதர்மிணி தர்மாம்பாளின் ஜாதகத்தையும் பிரபல ஜோதிஷர்களிடம் காட்டினார். எல்லோரும் அவருக்கு ஒரு சற் புத்திரன் பிறப்பான் என்றார்கள். காசி, ராமேஸ்வரம் முதலிய இடங்களுக்கு யாத்திரை செய்தார். ஸர்ப்பசாந்தி, நாகப் பிரதிஷ்டை முதலியன செய்தார். தர்மாம்பாளும் "என் குல விளக்கை எற்றி வை, பகவானே, குத்து விளக்கு வாங்கி வைக்கிறேன். தூண்டா விளக்கு வாங்கி வைக்கிறேன். தொட்டிலும் குழந்தையும் வாங்கிக் கொண்டுவந்து கட்டுகிறேன்" என்று எல்லாம் பிரார்த்தனை செய்து கொண்டாள்.

பகவான் இவர்கள் முறையீட்டைக் கேட்டு இரங்கினார். கனபாடிகளின் நாற்பத்தைந்தாம் வயதில் சிவராமன் பிறந்தான். எள்ளும் தண்ணியும் இறைக்க புத்திரன் பிறந்தான் என்று கனபாடிகளுக்கு எல்லையில்லா சந்தோஷம். குழந்தையைக் கண்ணின் கருமணி போல காத்து வந்தார். ஒருநாள் குழந்தை அவரைப் பார்த்து சிரித்து விளையாடாமல் போனால், அவ்வளவு தான்; அன்றைய தினம் அவர் சாப்பிடவே மாட்டார். குழந்தைக்கு ஏதோ உடம்புக்கு வந்து விட்டது என்று மிகவும் கஷ்டப்படுவார். குழந்தையை விட்டு அப்படி யிப்படி நகரமாட்டார். பார்க்கப் போனால் ஒன்று மிருக்காது. ஜலதோஷம் கொஞ்சம் பிடித்துக் கொண்டிருக்கும். இதற்காக இவ்வளவு பாடுபடுவார்.

---

போட்டான். ஆனால் எனக்குத்தான் விஷயம் தெரியுமே! ஏதோ நமக்குப் பழகிய குரலாக இருக்கிறதே என்று சற்று நிதானித்தேன். புரிந்து விட்டது. பாடியது நீ தான் என்று திட்டமாகச் சொன்னேன்" என்று பொருள்படப் பாடுகிறான். ஒரு பாட்டுக் கச்சேரியை இதுவரை யாராவது இப்படிப் புகழ்ந்திருப்பார்களா? சந்தேகந்தான். இதோ முழுப்பாட்டும்,

'நட்டுபுகழ் நந்திபாண! நீ எங்கையர்தம்
வீட்டிருந்துபாட விடிவளவும்—காட்டிலழும்
பேயென்றா(ள்) அன்னை, பிறர்நரி என்றார், தோழி
நாயென்றா(ள்), நீஎன்றே(ன்) நான்.'

பரிகாசம் இதை விட எப்படித் தான் வெளிப்பட முடியும்!

சிவராமனுக்கு ஐந்து வயது ஆயிற்று. கனபாடிகள் அவனை வாசிக்க வைத்தார். சிவராமனும் நன்றாக வாசித்துக் கொண்டு வந்தான். கனபாடிகள் சாஸ்திரோக்தமாக சிவராமனுக்கு ஏழாம் வயதில் விமரிசையாக உபநயனம் செய்வித்தார். உபநயனம் ஆனதும் குல ஆசாரப்படி சிவராமனைப் பக்கத்திலிருக்கும் வீடுகளில் பிக்ஷை எடுத்துக்கொண்டு வரச் சொன்னார்.

இந்த சமயத்தில் கனபாடிகளுக்கு சிறிது உடம்பு அசௌகரியம் ஏற்பட்டது. வியாதியால் படுத்த படுக்கையாய் கிடந்தார். போறாத குறைக்கு அவர் வைதிகத்தில் சம்பாதித்து சேர்த்து வைத்திருந்த ஆயிரத்து ஐந்நூறு ரூபாயும் போட்டிருந்த பாங்க் முறிந்து போய்விட்டது. இதனால் அவரை மேலும் கவலை சூழ்ந்து கொண்டது.கையிலிருந்த சிறிது பணமும் தர்மாம்பாளின் நகைகளும் கனபாடிகளின் உடம்பைக் கவனிப்பதற்குச் செலவு செய்யப்பட்டது. ஆனால் கனபாடிகளின் உடம்பு சௌகரியமாக வில்லை. சிவராமனின் பதின்மூன்றாம் வயதில் அவன் மூன்றாவது பாரம் படித்துக் கொண்டிருக்கும் போது அவர் உலக வாழ்வை நீத்தார். தாயும் தனயனும் தனியே இந்த உலகில் விடப்பட்டனர். பயங்கரமான அலைகள் உள்ள இந்த உலகமென்னும் கடலில், வாழ்க்கைக் கப்பலை செலுத்திவந்த மாலுமி இறந்தான். அக் கப்பலை செலுத்த வேண்டிய பொறுப்பு கப்பல் இன்னது என்றே அறியாத இரு பேதைகளிடம் விடப்பட்டது.

கனபாடிகள் இறக்கும்போது "சிவராமனை, என்னைப்போல, என் தலையில் அட்சதை போடு என்று கேட்கும்படியாக விட்டு விடாதே. எப்படியாவது கஷ்டப்பட்டு பத்தாவது வரையிலுமாவது படிக்க வைத்து விடு. பிறகு அவன் தானே முன்னுக்கு வந்துவிடுவான். அவன் படிப்பு முடியும் வரையில் கஷ்டப்பட்டால், பிறகு அவனுக்கு எங்காவது பத்து ரூபாய் வேலையாய்விடும். அப்புறம் சௌக்கியமாக இருக்கலாம். என்னைப்போல அவனை ஆகும்படியாக விட்டு விடாதே" என்று தர்மாம்பாளிடம் சொல்லி விட்டுப் போனார்.

கனபாடிகள் இறந்ததும், தாயும் மகனும் நடுக்காட்டில் கண்ணைக் குத்தி விடப்பட்டவர்கள் போல் ஆனார்கள். இதுவரையில் கஷ்டம் என்னவென்று அறியாதவர்களுக்கு பெருத்த கஷ்டம் ஏற்பட்டது. என்ன தான் கையிலிருந்த ஒன்றிரண்டு நகைகளை விற்றாலும் 200 ரூபாய்க்கு மேலாகாது. இதை வைத்துக்கொண்டு சிவராமனை பத்தாவது பாஸ் பண்ணும் வரையில் எப்படி சாப்பிடுவது, பள்ளிக்கூடச் சம்பளம் எப்படிக் கட்டுவது. குடிக்கூலிக் கொடுப்பது. மிகவும் கஷ்டம்தான். என்ன செய்வது? இறக்கும் தருவாயில் தன் பர்த்தா, கேட்டுக் கொண்டதை எபபடியாவது பூர்த்தி செய்துவிட வேண்டுமென்பது தர்மாம்பாள் மிகவும் பாடுபட்டாள்.

சிவராமனும் நன்றாகப் படித்ததால் பள்ளிக்கூடத்தில் அரைச் சம்பளம் கிடைத்தது. வகுப்பிலும் முதல் மாணவனாக இருந்தான். தர்மாம்பாள், கனபாடிகள் வைதிகம் வைத்துக் கொண்டிருந்த சில பெரிய மனிதர்களிடம் சென்று யாசித்து சிவராமன் பள்ளிக்கூடச் சம்பளத்திற்கு ஒன்று, அரை வாங்கிக் கட்டினாள். வயிற்றையும் வாயையும் ஒடுக்கிக் கொண்டாள். சிவராமன் பிக்ஷை எடுத்துக்கொண்டு வருவதை வைத்துக் கொண்டு காலம் தள்ளி வந்தாள்.

சிவராமன் எஸ். எஸ்.எல்.ஸி. ப[illegible] முதல் வகுப்பில் பாஸ் பண்ணினான். ஆனால் கனபாடிகள் நினைத்தபடி வேலை தான் உடனே [illegible]. மூன்று வருடங்கள் சென்று விட்டன. [illegible]லை யொன்றும் கிடைக்கவில்லை. இரண்டு டியூஷன் வைத்துக் கொண்டிருந்த[illegible]ண்டு ரூபாய் கிடைத்தது. பிக்ஷை எடுத்துக்கொண்டு தாயும் மகனும் ஏதோ காலம் தள்ளிக்கொண்டு வந்தார்கள்.

சிவராமன் இருந்த தெருவிற்கு அடுத்த தெருவில் சப் கலெக்டர் கல்யாணராமய்யரின் வீடு. கல்யாணராமய்யர் தங்கமான மனிதர். அவருக்குப் பிள்ளைகள் இல்லை. ஒரே ஒரு பெண். அவள் பெயர் தான் கோமளம். கோமள மென்ற பெயருக்கு ஏற்றபடி கோமளமாகத் தான் இருப்பாள். நல்ல சிவப்பு. தலையை வாரிப் பின்னிக்கொண்டு, முகத்தை அலம்பி நெற்றிக்கு இட்டுக்கொண்டாலே போதும். அன்றைக்கெல்லாம் பார்த்துக் கொண்டிருக்கலாம். அவ்வளவு அழகு என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்! வயது பதினைந்து. நான்காவது பாரத்தில் படித்துக் கொண்டு இருந்தாள். கனபாடிகள் வைதிகம் வைத்திருந்த வீடுகளில் கலெக்டர் வீடு ஒன்று. கல்யாணராமய்யர், சிவராமன் சம்பளத்திற்காக மாதம் இரண்டு ரூபாய் கொடுத்து வந்தார். ஆதலால் சிவராமன் இவர் வீட்டிற்குத் தினந்தோறும் பிக்ஷைக்கு வருவது வழக்கம்.

பரிசாரகன் இருந்தாலும் கல்யாணராமய்யர் ஸம்ஸாரம் சுந்தரி தான் தினந்தோறும் பிக்ஷை யிடுவது வழக்கம். "பவதி, பிக்ஷாந்தேஹி" என்ற குரல் ஒருநாள் கேட்டது. சுந்தரி உள்ளே ஏதோ அவசரக் காரியமாக இருந்தாள். கோமளத்தை பிக்ஷையிடச் சொன்னாள். கோமளம், சிவராமனை ஏதோ பார்த்திருக்கிறாளே தவிர, கிட்டே யிருந்து அதுவரையில் நன்றாகப் பார்த்ததில்லை. சிவராமனும் அப்படியே. பிக்ஷை எடுத்துக்கொண்டு கோமளம் நடந்து வந்தது, மான் புல்லை வாயில் கவ்விக்கொண்டு மருள மருள விழித்துக்கொண்டு வருவது போலிருந்தது. தோளில் தொங்கிக் கொண்டிருந்த பிக்ஷை பையின் வாயை விலக்கிக்கொண்டு பிக்ஷையை ஏற்றுக்கொள்ள சித்தமாக சிவராமன் இருந்தான். அருகில் சென்று பிக்ஷை யிடப்போன கோமளம், சிவராமனைப் பார்த்தாள். சிவராமனும் பார்த்தான். இருவர் கண்களும் ஒன்றை யொன்று பார்த்தன. மகுடி சப்தத்தைக் கேட்டு தடையுண்ட நாகம் போலவும், நறுமலரின் வாசனையை நுகர்ந்து திகைப்புண்ட வண்டு போலவும், இரண்டு நாளாய் பசியால் வாடுபவன் அன்னத்தைக் கண்டதும் அடையும் நிலையை அடைந்தாள் கோமளம். லஜ்ஜையால் கைகள் நடுங்கின. ஆனால் சிவராமனைப் பார்ப்பதிலிருந்து திரும்பவில்லை. தோள் துணியை பிக்ஷையை ஏற்றுக் கொள்ள விலக்கிக் கொண்டிருந்த சிவராமனின் கைகள் நழுவி விட்டது. அவனும் கோமளத்தின் அழகைப் பருகிய வண்ணம் தன்னையே மறந்து நின்றுகொண் டிருந்தான். இத்தகைய நிலைமையில் ஒரு நிமிஷங்கூட ஆகி யிருக்காது. "கோமளம், பிக்ஷை போட்டாயா ?" என்று தாயின் குரலைக் கேட்டாள் கோமளம். திடுக்கிட்டாள். சுய உணர்வை அப்போதே அடைந்தாள், "ஊம், போட்டாச்சு, அம்மா" என்று சொல்லிக்கொண்டே பிக்ஷை யிட்ட அவசரத்தில், சிவராமனும் துணியை அவசரத்தில் கையால் விலக்கினதால், சோற்றுப் பருக்கைகள் கீழே சிதறிப் போய் விட்டது. அப்பொழுது

அங்கே வந்த சுந்தரி, "இன்னும் உனக்கு பிக்ஷை கூடப் போடத் தெரியவில்லையே. இப்படியா சாதத்தை வாரியிரைப்பது" என்றாள். சிவராமன், "சிறிசுதானே அம்மாமி, ஏதோ கைதவறி சிந்திவிட்டாள்." என்றான்.

சுந்தரி சிரித்துக்கொண்டே "நீ ரொம்ப பெரிய மனுஷனாக்கும்," என்றாள். சிவராமனும் சிரித்துக் கொண்டே போனான்.

உள்ளே போய் பிக்ஷை கொண்டு வந்த சிப்பலை கோமளம் வைத்தாள். அவளுக்கு இந்த உலகிலிருப்பது போலவே யில்லை. தன்னையே அறியாமல் ஒருவித உணர்ச்சி அவளுக்கு ஏற்பட்டது. அந்த ஒரு நிமிஷத்தில் எவ்வளவு சந்தோஷமாக விருந்தது. அந்த அழகிய முகத்தை இன்னும் சிறிது நேரம் பார்க்கக் கொடுத்து வைக்கவில்லையே, என்று ஏங்கினாள். இப்பொழுது எங்கு பார்த்தாலும் சிவராமனே நிற்பது போலவும், தனக்கு பரிந்துகொண்டு தனது தாயிடம் பேசுவது போலவும் அவளுக்குத் தோன்றிற்று. தெருப் பக்கமாயிருந்த ஜன்னலைப் பிடித்துக்கொண்டு யோசனையிலாழ்ந்தாள். பிக்ஷை பை தோளில் தொங்க தூரத்தில் சிவராமன் சென்று கொண்டிருந்தது தெரிந்தது. கோமளம் என்ன கம்பீரமான நடை என்று நினைத்தாள். அன்றைய தினம் பள்ளிக்கூட பாடங்களையும் எழுதவில்லை. பள்ளிக்கூடத்தில் கூட அவளுக்கு பாடமே ஓடவில்லை. புஸ்தகத்தை திறந்தால் சிவராமன் முகம், எதிரில் உபாத்தியாயரைப் பார்த்தால் சிவராமனின் தோற்றம், பக்கத்தில் உட்கார்ந்திருக்கும் தனது சிநேகிதியைப் பார்த்தால் சிவராமனைப் போல இருந்தது. எப்பொழுது நாளையதினம் வரப்போகிறது மறுபடியும் பிக்ஷை யிடும்போது சிவராமனைப் பார்க்கலாம் என்று ஏங்கியிருந்தாள்.

மறுநாள், "என், இன்று இன்னும் சிவராமன் பிக்ஷைக்கு வரவில்லை" என்று சுந்தரி சொல்லிக் கொண்டிருந்தாள்.

கோமளம்:—"நான் இன்னிக்கி பிக்ஷை போட்டு விட்டேனம்மா,' என்றாள்.

சுந்தரி:—"பவதி பிக்ஷாந்தேஹி" என்று அவன் குரல் கூட கேட்கவில்லையே? இன்னிக்கும் என்ன, வாரி இறைத்துக் கொண்டே போட்டாயா?" என்றாள்.

கோமளம்:—"இல்லையம்மா, அவர் வருவதை வாசலிலிருந்தே பார்த்தேன். நான் உன்னைக் கூப்பிடுவானேன் என்று, நானே பிக்ஷை போட்டு விட்டேன்," என்றாள்.

ஆனால் அன்றைய தினம் மாத்திரம் சிவராமன் வரவிற்காக காத்திருந்து பிக்ஷை இடவில்லை. தினமுமே அந்தமாதிரி காத்திருந்து பிக்ஷை யிட்டால்தான் அவள் மனம் நிம்மதியடையும். அன்று இரவு தூக்கமும் வரும். இல்லாவிட்டால் அன்றையதினம் பித்துப் பிடித்தவள்போ லிருப்பாள். ஒருவருடனும் பேசமாட்டாள். ஏதாவது குருட்டு யோசனை செய்துகொண்டே யிருப்பாள். இப்பேதையின் மனம் இவ்வாறு தவித்துக் கொண்டிருக்கிறது. ஆனால் இறைவன் என்ன நினைத்துக் கொண்டிருக்கிறானோ?

அன்றையதினம் கோமளம் பிஷையிடப் போனபோது சிவராமனின் முகம் வாட்டமுற்று சோபையை யிழந்திருந்தது. குனிந்து பிஷை யிட்ட போது பை காலியாக விருந்ததைக் கண்டாள். சிவராமனை அடிக்கடி நேரிடையாக பார்க்க நேர்ந்ததால் இப்பொழுது கூச்சம் போய்விட்டது. கோமளம் "ஏன் இன்று பையில் ஒன்றையும் காணோம்?" என்று கேட்டாள்

சிவ:—எனக்கு உடம்பு சரியாயில்லை. நேற்றை மத்தியானத்திலிருந்து ஜுரம். எங்குமே பிஷைக்குப் போகவில்லை. இங்கு கூட என்னால் வர முடியவில்லை. ஆனால்........" அதற்குமேல் அவனால் ஒன்றும் சொல்ல முடியவில்லை. சொல்லத் தெரியவில்லை.

அதற்குள் கோமளம், 'தினம் உங்களுக்கு பிஷையிட்ட பிறகுதான் நான் சாப்பிடுவது வழக்கம். இன்றையதினம் நீங்கள் வராதிருந்தால் அதிக கஷ்டப்பட்டிருப்பேன். இருங்கள், இதோ வருகிறேன்," என்று உள்ளே சரசரவென்று போய் இன்னும் ஒரு சிப்பல் நிறைய அன்னத்தைக் கொண்டு வந்து பையில் போட்டுவிட்டு "உடம்பை ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்ளுங்கள்", என்றாள்.

சிவராமன் உடம்பு சரியாயில்லை, அதனால் எங்கும் பிஷைக்குப் போக வில்லை என்றதும், அதிகம் பிஷை போடவேண்டும் என்று தோன்றியது. இன்னுமொரு சிப்பல் அன்னம் அப்பொழுது கொண்டுபோய் போட்டு விட்டாள். பிறகுதான் அம்மா, "ஏன், அவ்வளவு பிஷை யிட்டாய்," என்று கேட்டால், என்ன சொல்வது என்று புரியவில்லை. கடைசியில் ஒரு யுக்தி செய்தாள். பேசாமல் போய் கட்டிலில் போர்த்திக்கொண்டு படுத்து விட்டாள். கணவனுக்கு சாதம் போட்டுவிட்டு சுந்தரி வந்தாள். "கோமளம், நீ தானே பிஷை யிட்டாய், வெங்கலப்பானையில், ஏன் அவ்வளவு சாதம் குறைந்திருக்கு. நீ சாப்பிட்டாய்விட்டதா என்ன? ஏன் போர்த்திக்கொண்டு படுத்துவிட்டாய்" என்று கேட்டாள்.

கோமளம்:—"இல்லையம்மா, இன்னிக்கி சிவராமனுக்கு உடம்பு சரியா யில்லையாம். ஜுரம்போ லிருக்கு. எங்கேயும் பிஷைக்குப் போகவில்லை யாம். இங்கு மாத்திரம் வந்திருக்கிறார். எனக்கு வயிற்றுவலி, நான் சாப்பிடப் போவதில்லையே என்று இன்னுமொரு சிப்பல்சாதம் நான்தான் பிஷை போட்டு விட்டேன்," என்றாள்.

சுந்தரி:—"சரி, குறைந்து இருக்கேனு கேட்டேன். பேசாமல் படுத்துக்கொண்டு தூங்கு. சிறிது பொறுத்து சாப்பிடலாம்." என்று சொல்லிவிட்டு போய்விட்டாள். ஆனால் உண்மையில் கோமளத்திற்கு வயிற்றுவலி தானா?

இதற்குப்பிறகு இரண்டு மூன்று நாட்கள் ஆகிவிட்டன. நிறுத்த முடியாத ஜுரம் சிவராமனுக்கு; மலேரியா ஜுரம், இவ்வளவு ஜுரத்தில் எப்படி அவனால் பிஷைக்குப் போக முடியும். தர்மாம்பாளுக்கு ஒன்றும் ஓடவில்லை. கனபாடிகள் காலமானபிறகு சிவராமனை நம்பியே இந்த உலகில் வாழ்ந்து வருகிறாள். அவனும் மலைபோல படுத்துக்கிடக்கிறான். அழுத கண்ணும் சிந்திய மூக்குமாகவே யிருந்தாள். ஆஸ்பத்திரிக்கோ சிவராமனால் போக முடியாது. நல்ல இங்கிலீஷ் டாக்டர்களை வரவழைத்

துப் பார்க்கலாமென்றாலோ கையில் பீஸ் கொடுக்க பணம் கிடையாது. ஆத லால் அவனே போய் தெரிந்த ஒரு நாட்டு வைத்தியரிடம் சிவராமனின் தேக நிலைமையைச் சொல்லி மருந்து வாங்கிக்கொடுத்து வந்தான். ஆனால் ஜுரம் நின்றபாடில்லை. கஞ்சி கூட ராமன் அருந்தவில்லை. நினைவே யில் லாமல் படுத்துக் கொண்டிருந்தான்.

சிவராமன் நான்கு நாட்களாக பள்ளிக்கு வராததினால், ஜுரம் அதிக மாக இருக்க வேண்டுமென்று கோமளம் ஊகித்தாள். எப்படியாவது சிவ ராமனைப் பார்க்க வேண்டுமென்று அவள் மனம் துடித்தது. வீட்டிலிருந்து தாய் தந்தையர்களுக்குத் தெரியாமல் எப்படிப் போகமுடியும்? அப்பா, அம்மாவுக்குத் தான் சிவராமனைப் போய்ப் பார்ப்பது தெரியக்கூடாது. ஸ்கூலிற்குப் போகும் போதும் காரிலேயே போகிறாள். வரும்போதும் காரிலேயே வருகிறாள். பின் எப்படித்தான் சிவராமனைப் பார்ப்பது என்று யோசனை செய்து கொண்டிருந்தாள். கடைசியில் ஒரு யோசனை அவளுக்குத் தோன்றிற்று. மத்தியானம் சாப்பாட்டிற்கு விடும் இடை வெளியில் பள்ளிக்கூடத்திலிருந்து நேராகப் போய் பார்ப்பது என்று தீர் மானித்துக் கொண்டாள்.

எப்பொழுது சாப்பாட்டிற்கு மணியடிக்கப் போகிறது என்று காத் துக்கொண்டிருந்தாள். மணியடித்ததும் தன் புத்தகங்களை ஒரு சிநேகிதி யிடம் கொடுத்துவிட்டு சிவராமன் வீட்டிற்குக் கிளம்பினாள். எப்பொழு துமே ரோட்டில் நடந்தறியாதவள் கோமளம். பருக்கை கற்கள் காலை குத்தின. வலியோ பொறுக்க முடியவில்லை. வேகமாக நடக்க முடிய வில்லை. மெதுவாக கஷ்டப்பட்டு நடந்து வந்தாள். பாருங்கள் காத லின் வேகத்தை! சிவராமன் வீட்டை யடைந்ததும் மெதுவாகக் கதவைத் திறந்துகொண்டு "சிவராமன் இருக்கிறாரா?" என்றாள்.

தர்மாம்பாள்:—"இருக்கான். நீ யாரடி யம்மா? என்ன வேண்டும்?" என்றாள்.

கோமளம்:—"ஒன்றும் வேண்டாம். அவருக்கு உடம்பு ஜுரம் எப் படி யிருக்கிறது என்றுப் பார்த்துப் போகலாமென்று வந்தேன்."

தர்மா:—"இதோ, பாரு, கண்ணைத் திறக்காமல் படுத்துக் கொண் டிருக்கிறான். ஜுரம் விடவேயில்லை. கஞ்சியும் குடிக்கலை. பகவான் இன்னும் என்னை என்ன பண்ண நினைத்துக் கொண்டிருக்கிறாரோ. நீ யாரு அம்மா?" என்றாள்.

கோம:—"நான் தான் சப் கலெக்டர் கல்யாணராமய்யர் பெண் கோமளம்."

தர்மா:—"என்ன, சப் கலெக்டர் பெண் கோமளமா? நீ சிறிசா யிருக் கிறத்தே நான் பார்த்தது. அடையாளமே தெரியவில்லை. வாடி யம்மா. இப்படி உட்கார்," என்றாள்.

(தொடரும்.)

# அறியாமை தானே!

(தி. முத்துராம கிருஷ்ணன்.)



ஆனந்தபோதினி 27-வது தொகுதி 9-வது பகுதியில் அரிசியைப்பற்றிய சில குறிப்புகளைக் கொடுத்தேன். அரிசியே நமக்கு முக்யமான உணவா யிருப்பதனால் முதலில் கவனிக்கப் பட்டதாயினும் அரிசியில் மாத்திரம் நமது கவனத்தைச் செலுத்திக் கொண்டிருக்க முடியாது. ஏனென்றால் நமது உடல் வளர்ச்சிக்கும், உடல் பலத்துக்கும் பற்பல தினுசான உணவுகளைச் சேர்த்து சாப்பிடவேண்டியது இருக்கிறது. நமது உடலில் அநேக பாகங்க ளிருக்கின்றன. ஒவ்வொரு பாகமும் வளர்ச்சியடைய வெவ்வேறு உணவுகள் இருக்கின்றன. ஆகவே நாம் சாப்பிடும் தினசரி உணவில் எல்லாப் பாகங்களுக்கும் வேண்டிய சத்துள்ள ஆகாரத்தைச் சாப்பிடுகிறோமா என்பதை நாம் கவனிக்க வேண்டியது மிக மிக அத்யாவசியம். அது இல்லாமல் சும்மா கண்ணை மூடிக் கொண்டு வெந்ததைத் தின்று விதி வந்தால் சாகிறது என்றிருந்தால் ஏதாவதொரு, ஒன்றோ அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட பாகங்களுக்கு வேண்டிய உணவு குறைந்து அது வளர்ச்சி யடையாமலே போய்விடும். அதனால் பின்னால் நாம் கஷ்டப்படவேண்டி யிருக்கும். ஒரு ரூபாய் செலவழிக்காததன் குற்றம் ஒன்பதுரூபாய் டாக்டர் 'பில்'லில் வந்து முடிந்தது என்று ஆகிவிடும். தேடிக்கொள்ள வசதிகள் வேண்டிய மட்டும் மலிந்து கிடக்கின்றன. ஆகவே நம் நிலைமைக்கு தகுந்தவாறே நாம் ஆகார வசதிகளைச் செய்து கொள்ளலாம்.

தினசரி சாப்பாட்டில் நாம் சேர்க்கும் மற்ற உணவு வகைகள் என்ன என்பதைப் பார்ப்போம். மாமிச பதார்த்தங்களென்றும், மாமிச மல்லாத பதார்த்தங்களென்றும் இருவகை உணவுகள் அமைந்திருக்கின்றன. சிலர் மாமிசம் சாப்பிடுகிறார்கள், சிலர் மாமிசம் சாப்பிடுகிறதில்லை. மாமிசம் சாப்பிடாதவர்கள் பால், மோர், தயிர், நெய் பருப்பு வகைகளை அதிகமாகச் சேர்க்கவேண்டும், மற்றும் காய் கறிகளைப்பற்றிக் கவனித்தால் அல்லது பொதுவாக வேகவைத்துச் சாப்பிடுகிற உணவுகளைக் கவனித்தால் இங்கேயும் அரிசியில் நடந்த கதைதான் நடக்கிறது. காய்கறி முதலாகிய உணவுகளையும் நாம் அதிகமாகத் தண்ணீர் வைத்து வேகவைக்கிறோம். நன்றாய் அதிலும் குழைவாய் வெந்து விட்டதா வென்று பார்த்து அது வேகவில்லை யென்றால் இன்னும் கொஞ்சம் தண்ணீரைவிட்டு வேக வைக்கிறார்கள் நமது பெண்மணிகள். வெந்தபின்பு தண்ணீரை அப்படியே சாக்கடைக்கு புண்ணிய தீர்த்தமாதிரி கொட்டி விடுகிறார்கள். அந்தோ! அதில்தானே நமது உடல் வளர்ச்சிக்கும் பலத்துக்கும் வேண்டிய சத்து அமைந்திருக்கிறது. சட்டியில் கிடக்கிறது சக்கை யல்லவா! அந்தச் சக்கையைத்தான் நன்றாய் மசாலாப்பொடி போட்டு, கடுகு போட்டு, தாளித்துச் சாப்பிடுகிறோம். அந்த தண்ணீரில்தான் நமது உடலுக்கு வேண்டிய உலோகச் சத்து இருக்கிறது. அதில் 'கால்ஷியம்' என்ற இரும்புச்சத்தும் 'பாஸ்பேட்' என்ற வேறொரு சத்து மிருக்கின்றன. தண்ணீரைக் கொட்டி விடுவதால் இந்த இரண்டு சத்துக்களும் செத்து விடுகின்றன. நோயைப்

பற்றின வியாதி இதனாலேயே வருகிறதாம். ஆகவே, சத்து போய் சக்கையைத்தான் சாப்பிடுகிறோம். அதனால்தான் வியாதிகள் வந்து அதிகச் செலவாகிறது என்று ஒருவாறு உணர்ந்தபோதிலும் இன்னும் பழைய கதைதான் நடக்கிறது. காய்கறிகளை வேகவைக்க எவ்வளவு தண்ணீர் தான் வைக்கவேண்டும். அது முடியவில்லையே என்றால் தவிட்டைப் பயன்படுத்தினமாதிரி இந்தத் தண்ணீரையும் ஏதாவதொரு வழியில் பயன் படுத்திக் கொள்ளவேண்டும். சிலர், அதாவது மாமிசம் சாப்பிடுபவர்கள் ஆட்டுக் கால் மற்றும் கோழி 'சூப்' போட்டுச் சாப்பிடுவார்கள். இது ஏதாவதொரு வியாதி வந்தால்தான் மிக அவசியம் ஏற்படும். அந்த 'சூப்' எப்படியென்றால் மிகவும் அதிகமாக தண்ணீர் வைத்து வேகவைப்பார்கள். தண்ணீர் நன்றாய் வற்றிக் கொஞ்சம் இருக்கும்பொழுது அதாவது வஸ்துவினுடைய சத்தெல்லாம் அந்த தண்ணீரில் இறங்கியிருக்கும், அதையெடுத்துச் சாப்பிடுவார்கள். அதே சங்கதியைத்தான் இங்கே தப்பிதமாக செய்கிறோம். ஆகவே அதற்கு ஒரே வழி 'வெஜிடபின் சூப்' என்று ஆங்கிலத்தில் சொல்வார்கள்; அதாவது காய்கறிசூப்' பண்ணிச் சாப்பிடலாம். அவசியம் அப்படித்தான் செய்யவேண்டும்.

கிழங்குகள், பருப்புகள் முதலியவைகளை வேகவைக்கிற பொழுது இதே மாதிரி முறைகளைத்தான் கையாளவேண்டும். கிழங்குகளை முதலில் தண்ணீர் விட்டு கழுவவேண்டும். பிறகு அதன்மேலுள்ள அழுக்கை மிகவும் லேசாக சுரண்டவேண்டும். நமது நாட்டிலுள்ள கெட்ட வழக்கமென்னவென்றால் கிழங்குகளை அவித்து மேல்தோலை மருந்துக்குக்கூட இல்லாமல் உரித்து விடுகிறார்கள். இது மிகவும் தப்பு என்று டாக்டர்கள் சொல்லுகிறார்கள். ஏனென்றால் தோலுக்கு ரொம்ப பக்கத்தில்தான் 'மினரல் சால்ட்' என்ற உலோக உப்புகளும் 'புரோடீன்ஸ்' என்ற புரதமும் இருக்கின்றன. அவற்றைச் சேதப்படுத்தக் கூடாது. ஆக்கம் இப்படியிருக்க காய்கறிகளுக்கு இன்னும் பரும்பு முதலியவைகளுக்கு சிலர் சோடா போடுவார்கள். இது மிகவும் கெடுதலாம். சீக்கிரம் வேக வேண்டுமென்ற எண்ணத்துடனேயே நம் பெண்மணிகள் இவ்வாறு செய்கிறார்கள். சோடா சேர்ப்பதால் 'வைடமின்' ஏ, 'வைடமின்' சி. அழிந்து போகின்றன. அதனாலுண்டான வியாதிகளைக் கவனித்தால் அப்பப்பா, சொல்ல முடியவில்லை. ஆகவே நாம் உணவை வேகவைத்துச் சாப்பிடுவதில் கவனிக்கவேண்டிய முக்கியமான சங்கதி 'சத்து' சாகாமலிருக்க வேண்டுமென்பதே.

அரிசியைக் கழுவியும், கஞ்சியை வடித்தும், காய்கறி, கிழங்கு, பருப்பு முதலியவைகளை அதிக தண்ணீர் வைத்து வேகவைத்து பின் அதைச் சாக்கடையில் கொட்டியும் அதனால் உண்டாகிற வியாதிகளையும் சிவலோகத்துக் கனுப்ப ஒரு நல்ல வழி இருக்கிறது. அதை நடைமுறையில் கொண்டுவரவேண்டுமே அதிலேதானிருக்கிறது சங்கடமெல்லாம். ஆவியிலே சமைப்பதுதான் அந்த ரகஸ்யம். பருப்பு, அரிசி, காய்கறிகளை ஒரே தடவையில் சமைத்து விடலாம். அதற்கு ஒரு 'குக்கர்'தான் தேவை. சரிதான் இப்போது குக்கருக்கு எங்கே வழியிருக்கிறது? அதிலும் இப்பொழுது சண்டை நேரம் என்று சிலர் எண்ணலாம். நம்மிடம்தான் தொழிலிருக்கிறதே. நமது சொந்த 'மேக்' 'குக்கர்' ஒன்று செய்தால் போய் விட்டது. என் வீட்டில் கூட இதைச் சொல்லிச் சொல்லிப் பார்க்கிறேன்.

# ஆமை

(ஆசிரியர் வே. அப்பாசாமி.)

குளம், குட்டை, சுனைறு, ஆறு முதலிய நீர் நிலைகளில் ஆமை வசிக்கும். அதற்குத் தண்ணீரினுள் வாழ மிக்க விருப்பம். இரை தேடுங் காலத்து தனது உள்ளடங்கிய ஐயுறுப்புக்களை—விசிறி—அவிழ்த்து—உடைத்து விடும். பகைவரைக் காணுங்கால், பகை வருக்கமாய காம, குரோத, லோப, மோக மத, மாத்சரியம் கண்ட அந்தணர்—அறவோர் ஐம்புலன்களை அடக்குவதே போன்று, தனது வெளிநீண்ட ஐயுறுப்புக்களையும் அடக்கி அசையா கல்லே போன்று அமைந்து விடும். பகைவர் சென்றபின் பண்டைய நிலையுற்று தனது இரைப்பொருளை நாடும். இதனுடைய வாழ்க்கையும் இனப்பெருக்கமும் நுணுகி ஆராய்வார்க்குச் சிறிது வியப்பினை அளிப்பதாகும்.

கடலாமை, கல்லாமை, சுனைற்றாமை, ஆற்றாமை முதலிய பல வகைகள் உண்டு. இந்த ஆமைகள் மனித சமூகத்துக்கு நன்மையையும் புரிவதில்லை; தீமையையும் புரியவில்லை; அங்ஙனம் இருக்க, "ஆமை—புகுந்த வீடும், அமீனா புகுந்த வீடும் உருப்படாது" என்ற பழமொழி ஏன் எழுந்தது? அமீனா புகுந்த வீட்டிலாவது தாவர சங்கமப் பொருள்களுக்கு விபத்து ஏற்பட்டு விமோசனம் அடைந்து விடும். அதனால் வீடு உருப்படாது போகலாம்! ஆமை புகுந்த வீடு ஏன் உருப்படாது? அந்த வீட்டுக்கு எவ்வாறு கெடுதல் ஏற்படுகிறது? இவ் வினாக்களுக்கு விடையிறுனை ஒருபுறம் இருக்கட்டும்.

சில சமயங்களில் சில காரியங்களைச் சரிவர செய்யாமை ஏற்படுகிறது. அதனால் தன்மை விளையாமை உண்டாகிறது. பாருங்கள்! செய்யாமை விளையாமையை உற்பத்தி செய்து வாழாமைக்கு இடம் கொடுக்கிறது.-(ஏற்படுத்துகிறது.) நன்கு வாழாமை ஏற்படின் உயிர் நிலையாமை உண்டாகிறது. அப்புறம் நம் கதி அதோகதிதான்!

---

அவர்கள் போடா, நீ சொல்லுகிறபடிச் செய்தால் காய்கறிகளெல்லாம் கன்னிப்போகுமே யென்று, பிடிவாதமாக இருக்கிறார்கள். உடனே சத்யாக்கிரகம் செய்யலாமா என்று கூட பார்த்தேன். உடனே தோசை நல்லதா இட்டலி நல்லதா என்று கேட்டேன். இட்டலிதான் நல்லது என்றார்கள். ஏன் அப்படி யென்றேன். உம், இட்டலி ஆவியிலே வேகிறதா இல்லையா. தோசை சூடல்லவா என்றார்கள். அப்படிக் கண்டீர்களா என்றேன். நானும் அதைத்தான் சொல்லுகிறேன். ஆவியில் சமைத்தால் முதலில் உடம்புக்கு மிகவும் நல்லது. இரண்டாவது ஆகாரச்சத்து வெளியே தப்பி போக முடியாது. மூன்றாவது விறகு எவ்வளவோ மிச்சமாகிறது. நான்காவது பெண்களுக்கு நேரம் எவ்வளவோ மிச்சமாகிறது. அந்த நேரத்தில் அதாவது சமையல் பண்ணிக் கொண்டிருக்கும்போதே தையலும் தேற்ற நூலைப் பார்த்து படித்துக் கொண்டிருக்கலாம். இதை யெல்லாம் தெரிந்தும் நடைமுறையில் கொண்டு வராதது அறியாமைதானே!

இந்தக் கல்லாமையைப் பார்ப்போம். அறியாமை அகக்கண் தெரியாமை, அறிவு விளங்காமை. நன்மை புரியாமை இத்தனை ஆமைகளை உண்டாக்கி விடுகிறது. தான் மட்டும் தனித்து வாழ்கிறதா! மிக்க சாமார்த்தியமுள்ளது. பல ஆமைகளையும் உண்டாக்கியதோடு புகழாமைக்கும் இடம் ஏற்படுத்துகிறது.

ஆற்றாமை. இது சோம்பேறிகளிடம் வாழும். எளிதில் இயற்றுங் காரியங்களைக் கூட இயற்றாது எய்த்திருப்பதாகும். இவ் வாற்றாமையால் சமூகத்தில் கூடாமை, சுக போகங்களில் கலவாமை, உடல் உளப் பண்புகள் திருந்தாமை முதலியவை உண்டாகின்றன.

இங்கோர் ஆமை இருக்கிறது. இது புகுந்த வீட்டில் ஒவ்வாமை ஏற்படும். அடிக்கடி ஒவ்வொருவ ருள்ளத்தையும் ஒடுங்காமைக்கு உட்படுத்தும். குடும்பத்தினர் குறைத்துக் கொள்ளுவர். குடும்பத்துக்கு—வீட்டுக்கு வந்தது ஆபத்து. இந்தப் பொறாமை புகுந்த வீடு தான் உருப்படாது என்று முன்னர் கூறியதாகும். இந்த ஆமை புகுந்த சங்கமோ, தொழிற் சாலையோ அரசாங்க அரங்கமோ எந்த இடமாயினும் சரி; அது பாழ்.

ஆமைகளெல்லாம் எவ்வாறு உண்டாகின்றன? நிலத்தில் முட்டையிட்டு உண்டாவது நம் கண்ணுக்குப் புலப்படும் ஆமைகளாகும். நம் கண்ணுக்குப் புலப்படா ஆமைகள் பல இருக்கின்றனவே! அவை 'ஆ' என்னும் எதிர்மறை விகுதியுடன் 'மை'யுங் கலந்த ஆமையாகும் இவ் வாமைக்கு உடன்பாட்டிற்கு மாறான—எதிர் மறையான சொற்களையுண்டாக்கும் ஆற்றல் ஏற்பட்டுள்ளது. இதைக் கண்டு கலங்காமை வேண்டும்.

மற்றும் பல ஆமைகள் உள; அவை நமக்குப் பெரும் பெரும் நன்மை அளிப்பவை. கள்ளாமை கொள் எள்ளாமை ஏற்படும். பிறர் பொருளை வெஃகாமை வேண்டும். அதனால் உள்ளத்தூய்மை ஏற்பட்டு வீட்டுலகம் உன்னை நீக்காமை ஏற்படும். நிலையாமையை நினை; மனம் அலையாமை உண்டாகும். கொல்லாமை இப் பூமியில் பிறப்பு இல்லாமைக்கு ஏதுவன்றோ?

இந்தத் தீண்டாமையைக் கவனி. இதை ஒரு பெரியார், "விலக்குங்கள்! விலக்குங்கள்!!" என்கிறார். இதை சமூகம் உணராமையால் இந்து சமூகத்துக்கே புகழாமை உண்டாகிறது. தீண்டாதார் அயல் மதங்களை நண்ணாமை வேண்டுமாயின் தீண்டாமையை ஒழியுங்கள். இந்துக்களின் உள்ளம் கனியாமையானதா? நீங்கள் மனம் கனியாமை யுள்ளவர்களாயின் இனியாமை ஏற்பட்டு இந்து மதமே இராமை ஏற்படும் அல்லவா!

உழையாமை ஓர் கேடல்லவா! நாட்டுக்கு உழை. சமூகத்துக்கு உழை; பிற உயிர்களுக்கு உழை. இன்னாமை இயற்றாதே. பொல்லாமை கொள்; அஞ்சாமை உண்டாகும்; இகழாமை ஏற்படும்.

மறவாமையை எடுத்துக் கொள்ளுவோம். உலகின் உன்னத ஸ்தானத்தையே இம் மறவாமை அளித்து விடும். சிவநாமம் மறவாமையைக் கொள்; பிறவாமை—இறவாமை கிட்டும். ஆனந்தம்-பேரானந்தம் பெறுவீர்.

# ஜ்யோதிஷ பல ரகஸ்யம்

**(சி. பி. ஆனந்தம்.)**



### 16. வெள்ளி உலகத்தின் இயற்கையும் பலனும்

சுக்கிர அண்டம் சூர்யனை நடுவாக்கி அதனைச் சுற்றி ஓடும் கதியில், நமது நில உலகினுக்குத் தென் கிழக்கில் (South East)—அதாவது உதயவானுக்கும், அடிபாதலம்—நீர்க்கீழ் என்னும் கீழ் அடிவானுக்கும் மத்தியமான எல்லைக் கண் இதன் தோற்றம் காணப்பெறும். இதனால், சுக்கிரனுக்கு அந்த திக்கின் ஆதிக்கத்தைக் கூறினர். இதன் சுற்று வீதி பூமியின் சுற்று வீதிக்கு உட்புறமாக—அதாவது பூமியின் சுற்று வீதியை அதற்கு வெளிப்புறமாகக் கொண்டு அமைந்திருத்தலின், இதன் இயற்கைப்பலன் முழுவதும் நிலவுலகினுக்கே உரித்தானதென்று கருதுகின்றனர். அந்தப் பலன்கள் முழுவதும் பொருள் எல்லையின் சிறப்புக்களுக்கு எவ்வளவு தூரம் அவற்றின் உச்சஸ்தாயியின் முழுவரை மட்டும் கூறத்தக்கதோ அவ்வளவிற்கு காட்சிக்கும்—உணர்விற்கும் அப்பாலாய தெய்வ எல்லையின் சித்திகளுக்கும் வெள்ளி உலகன் அதிசய சக்திகளை உரித்தாகக் கற்பிக்கலாம். பொருள் எல்லை தொட்டு—காட்சிக்கும் உணர்விற்கும் அபபாலாய தெய்வ எல்லை மட்டும் ஆதிக்கம் கொண்ட வியாழ உலகினைப் பற்றி இது முன் நீங்கள் அறிந்திருக்கிறீர்கள் அல்லவா! ஆனால், தெய்வ எல்லையின் பேரதிசயங்கள் பொருள் எல்லையிலேயே—அதாவது காட்சி எல்லையிலேயே நிகழ்விற்கு அல்லது அனுபவங்களுக்குரியதாக ஆவது வெள்ளி உலகில் பெரும் பெற்றியால் சாத்தியமாகின்றதென்கின்றனர். எனவே, சுக்ரனின் பலன்கள் வியாழனினும் மகத்தானதாய்—அதற்குரிய இயல்கள் நிறைந்ததாக விருக்கின்றதென அறிகின்றோம்.

இந்தப் பலன்கள் பூமிக்கு கீழ் அல்லது மேற்பால் சுக்ரன் வருகையில், சூர்யன் பூமிக்கும் சுக்ரனுக்கும் இடைநிலையிற் சேராத காலம் மட்டும் மிகவும் உன்னதம் கொண்டிருக்கும். அவ்விதம் சூர்யன் சுக்ர அண்டத்திற்கும்—பூமிக்கும் இடைநிலையில் வாய்க்கும் காலம் மனமோகன எல்லையில் சாட்சி நடுவாக இருக்கும். அவ்வித நிலையில், சூர்யனுக்கு மேற்பால் உதயதாரை யென்ன (மெல்லிய—ஆனால் பெரிய வொரு பிறைவடி யென்ன) சுக்ரன் வரும் பொழுதில், வித்தி நிலைகளின் படிப்படியான ஏற்றங்கள்—அவற்றிற்குரிய முயற்சிகள்—முற்போக்குகள் இவை முதலியன பலனாக நிகழும். அதேபோல் சூர்யனுக்குக் கீழ்பால், சின்னஞ் சிறிய முழுமதி யென்னத் திகழுங்காலை, வித்தி நிலைகளின் பலனை இன்ப அனுபவங்களுக்குரியதாக நேரும். அபாரமான தன்னம்பிக்கை-தளர் வில்லாத ஊக்கம்-மிகுந்த மனோதிடம்-அஞ்சாமை-நேர்மையின் பெரு நினைவுகள்-உற்சாகம்-பரிசுத்தம்-தியாகம் இவை இதன் இயல்களாகும். இவ்வழி, வெள்ளி முதல் மதிமந்திரி என்பர்.

இதுவும் வியாழனைப் போன்றே எல்லைகள் யாவினும் அறிவு நிலையின் ஆதரவில் மனோபுத்தி பாகங்களின் சிறப்புக்களுக்கு உரியதாகும். ஆனால்,

சுக்ரப் பேருலகம் அசாத்தியமான—அசாதாரணமான வித்திகளையும் கூட அளவில்லாது-வரையின்றி வர்ஷிக்க வல்லதாகும். பொதுவில், பொருள் நிலையின் வித்தி அநுபவங்களே இதன் தன்மையாதலால், பொருள் எல்லையின் தொடர்புகளில் யோகபலன் வெகுவாகக் கொண்டதென்னவேண்டும். இவ்விதம் பொருள் எல்லையின் தொடர்பு இதன் செல்வாக்காக இருந்தபோதிலும், வியாழனைப் போன்றே எல்லைகள் யாவற்றிலும் நடுவினையுடைய சம்பந்தங்களைக் கொண்டதென்பதையும் நினைவிற் கொள்ள வேண்டும். அந்த சம்பந்தங்களின் விசேஷத்தினால், 'அறிவது அறிவு' என்னும் அளப்பரிய பெற்றியின் வித்திகளுக்கு இதன் பலன் பெரிதும் உகந்ததென்று 'பலபாகம்' சிறப்பு வழி கூறும். இதில் வியாழனுக்கு மாறுதல் வேண்டாத வைதிகத்தன்மையைக் கற்பித்தால், சுக்ரனுக்கு தாராள மனப்பான்மையும் (Liberal)-பரந்த நோக்கமும் பெரு நிலைகளாகக் கூறலாம். இவ்வழி சுக்ரனுக்கு புலன் மறுப்பு—தன்னலத் தியாகம்-நேர்மைநெறி-உயர் சித்தாந்தம்.—விடாமுயற்சி இவை இயற்பலன்களாகும். ஜ்யோதிஷ பலபாகம் இதனை தெய்வ சக்தி-மந்திரி என்றது.

ஜீவ நிலைக்குரிய—அதாவது ஜீவநிலையின் இன்ப நிலையம் அதன் ஒரு முதல் வேற்றென இயல்பின் இயங்குவது சுக்ரன். அதில் அடங்கியுள்ள நிஷண்யம் மிகுந்த முன்-பின் சந்தக்கள் பேரளவைகட்கும் அதீதமானவை. பலன் நிகழ்த்துவதில் அவ்விதம் மதிக்கப் பெறுகின்றது. இதனால், தோற்றங்கட் காதரவான வரை (எல்லை) முதல்—ஒடுக்கத்து உயர்கோடு என்னும் உபசாந்த எழில் நிலையம் மட்டும் ஒரு நடு முதல் நாயகமாய்—அல்லது தாயகமாய் எல்லா முனைகளிலும் பெரு விகாசத்தை நிறைப்பதாக சுக்ரனின் இயல் இருப்பதை உணர்ந்திருக்கின்றனர். இதுகொண்டு 'கன்னியென மறைபேசும்' உயர் அன்னை—ஒரு முதல் சக்தி யென்பர். எல்லைகள் யாவற்றிலும் ஆக்கத்தின் எழில் நிலையாதல், அருட்பேறு-திவ்யதேகனைக் கொள்வர். பெறுவதற் கரிய பெரும் பேறுகளின் வித்தி லக்ஷியமானதால், லட்சிய முதல் (Lord of Ambitions or Aims) என்றனர். இச்சை இதன் மூல வித்தாதலின், காமகாரகன் என்றது பலபாகம். எழுச்சி-உத்வேகம் இச்சையின் விளைவாதல், தெய்வ எல்லையிலும் கொள்ளத்தக்க காதல் நிலை (Love Purity) என்பர். அனுபவ எல்லைகளில் இன்பமே காணுதலின், இன்பகாரகன் (Lord of Enjoyments) என்று கூறுவர். வித்தி முதலாய் (Lord of Achievements) உயர்தரத்து லட்சியங்களில், படைப்பிற் காணும் உடைமைகள் அனைத்தும் இதன் ஆதிக்கத்து வருதலின், பாக்கிய காரகன் எனக் கருதுவர்.

மாசு-மறுவற்ற காந்தி-அருகம்புல் நுனியின் ஒளித்தேசு இதன் வண்ணம் வீசும் எழில்—அதாவது வெண்மை நிறத்தது சுக்ர அண்டம் ஆகும். பிரவர்த்திக்கும்-நிவர்த்திக்கும் நடுநிலையாக இதன் குணம் இராஜோகுணமுடையதாக இருக்கும்.

பொருள் எல்லையில் சர்வவித்தி காரகனும்—மனஎல்லையின் ஸ்படிகம் போன்ற நின்மல நிலையினனும்—அவ்வழி உயர்ந்த லக்ஷிய புருஷனும்—உணர்வு எல்லையில் அருள் நிறைவின் ஞானமாய்-உபசாந்த எல்லையில் தெய்வ எழிலின் அருள் வித்தியேயாய் சுக்ர அண்டத்தைப்பற்றி அறிஞர் கூறி வைத்திருக்கின்றனர்.

இந்நிலையில், பொருள் எல்லையின் பாக்யங்களும்—மனோகரமான வஸ்துக்களும்—இன்ப எழிற் குறித்தாகும் சேர்க்கைகளும்—இனிமை நிறைந்த சங்கங்களும் இரஸிகத்தன்மையும்—இன்ப அநுபவமும்—லக்ஷிய வித்தியும்—ஒலி—ஒளி நிலைகளின் எழில் விளக்கென மிளிரும இசை-நிருத்தங்களும் சுக்ரனின் பலன்களாகக் கூறலாம்.

இவையெல்லாம் அண்டவானின் எல்லைக்குரிய பலன்களுள் அடங்கும். இனி, பிண்டவானின் எல்லைக்குரிய பலன்கள் காணுதல் அவசியம். ரஸனையே ஜீவனாகவுடைய சுக்ரன்—ரஸனைக்குரிய இன்ப நிலைகளின் ஒரு முதல் ஊற்று—அல்லது தாயகமான அல்லது சக்தியான அளப்பரிய ஜ்யோதிர் மண்டலத்தின் (சூர்ய மண்டலத்தின்) நடுதோற்ற-ஒடுக்கங்கட்காதாரவான அருட்டேசனாக மிளிருகின்றது. இதயம் இதன் எழிற்கோட்டம். மூலம் முதல் ஆக்ஞை மட்டும் இதன் பிரவர்த்தி விலாசம். பொறிவாயில்கள் இதன் பீடம். ஆக்ஞை முதல் சகஸ்ராரம் மட்டும் இன்ப எல்லை. உடற்கூறில் உற்பத்திக்குரிய அம்சத்தையும் சுக்ல வீர்யத்தையும்-சிலேஷ்மாதிகாரத்தையும் சுக்ரனுக்குக் கூறுவர்.

## மரம் உருக்கை விட உயர்ந்தது
## மரத்தைப் பதப்படுத்துவது முக்கியம்

காளான், கறையான், கடற்கிருமிகள், பூச்சிகள் இவற்றிலிருந்து மரத்தை எப்படிக் காப்பாற்றலாம்? டேராடூன், காட்டு ஆராய்ச்சி இலாகா சமீபத்தில் பிரசுரித்த துண்டுப் பிரசுரம் இதற்கு வழி கூறுகிறது.

காளான், கறையான் முதலியவற்றால் மரத்துக்கு அதிக சேதம் ஏற்படுகிறதென்றும், மரத்தைப் பதப்படுத்துவது பொருளாதார முக்கியத்துவம் வாய்ந்ததென்றும் துண்டுப் பிரசுரம் கூறுகிறது. சரியானபடி உபயோகித்தால் மரம் உருக்கையும், மற்றப் பொருள்களையும்விட உயர்ந்தது என்று தற்கால ஆராய்ச்சி நிரூபித்துள்ளது. உஷ்ணம், மின்சாரம், சத்தம் மூன்றும் மரம் வழியாய்ப் பாயாது. மரம் சுலபமாகக் கிடைக்கிறது. வேலை செய்வதற்கும் எளிதாயிருக்கிறது. இக் காரணங்களால் உலோகத்தை விட மரமே சிலாக்கியம். மரத்தை உபயோகிப்பதற்கு முன்னர் ரசாயனப் பொருள்களைக் கொண்டு பூச்சிகள் அரிக்காதபடி அதைப் பதப்படுத்தினால் அது வெகு காலைக்கு நன்றாக உழைக்கும். எண்ணெய்ப் பூச்சுகளாலோ, அல்லது தண்ணீரில் கரையும் ரசாயன மருந்துகளாலோ அல்லது ஆவியாய்ப் போகும் திராவகங்களில் கலக்கப்படும் பொருள்களாலோ மரத்தை எப்படி பதப்படுத்தலாம் என்பது துண்டுப் பிரசுரத்தில் கொடுக்கப்பட்டுள்ளது. இதற்காக மரத்தை எப்படி தயார் செய்வது. அனேகப் பதப்படுத்தும் முறைகள், அவற்றுக்கு ஆகும் செலவு, பதப்படுத்தின பிறகு உபயோகிக்க வேண்டிய விதம் எல்லாம் துண்டுப் பிரசுரத்தில் காட்டப்பட்டிருக்கின்றன.

# வைத்தியம்

(வீ. சங்கர ஐயர்.)

## பித்த காங்கைக்கு

(*a*) ஏலம், லவங்கம், திப்பிலி, நெல்லிப்பருப்பு, அதிமதுரம், விலாமிச்ச வேர், வெட்டிவேர், இலுப்பைப்பூ, சமம் சூரணித்து திருகடிப் பிரமாணம் ஜீனியில் கொடுக்கவும்.

(*b*) சுக்கு 3 பலம், மிளகு 2 பலம், திப்பிலி 5 பலம், கூவைநீர் ஏலம், லவங்கம், வகைக்கு ½ பலம், சூரணித்து சமம் ஜீனிசேர்த்து திரிகடிப் பிரமாணம் கொடுக்கவும்.

(c) ஜீரகம், நெல்லிவற்றல், சுக்கு, ஏலம் இவைகளை சமம் பொடி செய்து சமம் ஜீனி சேர்த்து திரிகடிப் பிரமாணம் சாப்பிடவும்.

## இருமலுக்கு

(*a*) திருகடு, கடுக்காய், அரத்தை, ஓமம், வகைக்கு 1 பலம் பொடித்து சமம் ஜீனி சேர்த்து திரிகடிப் பிரமாணம் தேனில் சாப்பிடவும்.

(*b*) சுக்கு 2 பலம், திப்பிலி 1 பலம், மிளகு ½ பலம், ஏலம் ⅛ பலம் இராம்பு $\frac{1}{16}$ பலம், பொடித்து சமம் அமுக்கரா சூரணம் சேர்த்து சமம் ஜீனி சேர்த்து திரிகடிப் பிரமாணம் நெய்யில் சாப்பிடவும்.

(*c*) தூதுவிளை, முருங்கப்பட்டை, திப்பிலி இவை சமம் பொடித்து சமம் ஜீனி சேர்த்து நெய்யில் திரிகடிப் பிரமாணம் சாப்பிடவும்.

(*d*) ஓமம், கடுக்காய், மிளகு, திப்பிலி, அரத்தை, அக்கிரகாரம், சமம் பொடித்து சமம் ஜீனி சேர்த்து திரிகடியளவு சாப்பிடவும்.

## பல் நோய்க்கு

செங்கொட்டை 10 பலம் கரியுப்பு 5 பலம், ஒரு கலயத்தில் போட்டு இவை முழுகும்படி எருக்கம்பால் விட்டு மூடி சீலமண் செய்து முழு புடம் போட்டு எடுத்துப் பொடித்து பல் துலக்கவும்

## காதிரைச்சல், காது வலிக்கு

(*a*) பெருங்காயம், உப்பு, வசம்பு, வில்வப்பழச்சதை, முருங்கை வேர்பட்டை சமம் தட்டி தைவிளைச்சாறும் நல்லெண்ணெயும் வேப்பெண்ணெயும் சேர்த்து காய்ச்சி வடிகட்டி காதில் விடவும்.

(*b*) வேப்பெண்ணெயில் மஞ்சள், சுருள்ளி, வசம்பு, தட்டி காய்ச்சி காதில் விடவும். உச்சியிலும் தேய்க்கவும்.

(c) நல்லெண்ணெயில் கிலப்பனைக் கிழங்கு அரைத்துக் கலக்கிக் காய்ச்சி தலை முழுகி வரவும்.

## மேகம், சுக்கில பிரம்மியம் முதலியவை

(நீர்த்தாரைக்குத்து, சுக்கிலம் விழுதல்)

(*a*) முருங்கைப்பூ, சுற்றுழைச் சோறு, வெண்ணெய், சமம் அரைத்து வேளை யொன்றுக்கு மாங்காயளவு காலை மாலை மூன்று நாள் சாப்பிடவும். உப்பு புளி நீக்கவும்.

(b) கலைக்கொம்பு, சந்தனம், சமம் மோரில் அரைத்து கொட்டைப் பாக்களவு தேன் சேர்த்து சாப்பிடவும்.

(c) கோரைக்கிழங்கு, விஷ்ணுக்கிராந்தி, மிளகு, வகைக்கு பலம் 1¼ வீதம் 3 படித் தண்ணீரில் போட்டு ¼ படியாக்கி 3 நாள் கொடுக்கவும்.

(d) அதிமதுரத்தை சூரணித்து திரிகடிப் பிரமாணம் க்ஷீராகாரத்தில் தினம் காலை மாலை 12 நாள் சாப்பிடவும்.

(e) ஒரு பல சீனக்காரத்தை பசுவின் பால் விட்டரைத்து வில்லை தட்டி சீலை மண் செய்து புடம் போட்டு வேளை யொன்றுக்கு விராகனிடை 1½ எலுமிச்சம்பழச் சாற்றில் காலை மாலை 3 நாள் கொடுக்கவும். பத்தியம்—பசுவின் மோரும் சோறும்—உப்புக்கூடாது.

(f) சோற்றுக் கற்றாழை வேர் எரு பிடியை இளநீரில் அரைத்து ½ பல வெந்தியத்தையும் அரைத்து ஜீனி சேர்த்து மூன்று நாள் சாப்பிடவும்.

(g) எலுமிச்சம் பழச்சாறு, நருன்னிச்சாறு, பனங்கருப்பட்டி சேர்த்து, இரவு பனியில் வைத்து காலை சாப்பிடவும்.

(h) மஞ்சள், வெல்லம், வகைக்கு 4 பலம்; மிளகு, சுக்கு, ஏலம், வகைக்கு பலம் 2; வெங்காரம், கிராம்பு, வகைக்கு வராகனெடை 2, இவைகளை 1 படி நல்லெண்ணெயில் போட்டு காய்ச்சி வடி கட்டி வேளைக்கு ஒரு டீஸ்பூன் வீதம் க்ஷீராகாரத்தில் சாப்பிட சகலவித பிரமியம், பெரும்பாடு, உஷ்ணம், கல்லடைப்பு, நீர்க்கடுப்பு, மூத்திர கிருச்சிரம் முதலிய சகல வியாதிகளும் குணப்படும்.

(i) இளநீர், கண்ணை குடைந்து அதில் ஜீரகம், ஜீனி, பாசிப்பயறு ½ பலம் வீதம் போட்டு இரவு ஊறின பிறகு காலை அரைத்து கலக்கி 3 நாள் காலை மாலை சாப்பிடவும்.

(j) கீழ்வாய் நெல்லியிலை 1 பிடி, ஜீரகம் ⅛ பலம் அரைத்து எருமைத்தயிரில் மூன்று நாள் சாப்பிடவும்.

(k) வெங்காரம், கற்பூர சலாசத்து வகைக்கு 1 பலம், எலுமிச்சம் பழச் சாற்றில் அரைத்து வில்லை தட்டி சுண்ணாம்பால் குகை செய்து அதினுள் வைத்து சிறு புடம் வைத்து வேளைக்கு 1 விராகனிடை வீதம் தேனில் கொடுக்க நீரடைப்பு, கல்லடைப்பு, வெட்டை, கடுப்பு, பிரமேகம், முதலியன குணப்படும்.

(l) தேங்காய்ப் பால், பருத்திவிதைப் பால், பசுவின் பால், வகைக்கு 1 படி பறங்கிப்பட்டை, சுக்கு, மிளகு, ஜீரகம் வகைக்கு 1 பலம் அரைத்துப் போட்டு காய்ச்சி 1½ படியாக்கி 6 நாள் காலை மாலை சாப்பிடவும்.

(m) பூனைக்காலி விதை, நிலப்பனைக்கிழங்கு, கலைக்கொம்பு, ஆவாரை வேர், ஆவார விதை சமம் சேர்த்து பசுவின் பால் விட்டு அரைத்து 3 நாள் காலை மாலை கொடுக்கவும்.

(n) மரமஞ்சள், கருவேலம் பிசின், வகைக்கு ½ பலம், மஞ்சள், தேற்றாம் விதை வகைக்கு ¼ பலம், ஆவார விதை 2½ பலம், பொடி செய்து தேனில் 20 நாள் காலை மாலை சாப்பிடவும்.

(o) மா மஞ்சள், சுக்கு, கடுகு ½ பலம் வீதம், கருவேலம் பிசின் ¼ பலம், ஆவாரை விதை 2½ பலம், ஆவாரை வேர் கஷாயத்தில் அரைத்து, மோரில் 20 நாள் காலை மாலை கொடுக்கவும்.

(p) நான்கு பலம் ஜீனிப்பாகில் கோதுமை மா, உழுந்து மா, பாசிப் பருப்புமா, நற்சீரகம், அமுக்கிரா, கசகசா, சிலப்பனைக்கிழங்கு, இவைகளின் தூள், வகைக்கு 4 பலம் போட்டு 4 பலம் நெய் விட்டு கிளறின லேகியம் வேளை யொன்றுக்கு கொட்டைப் பாக்களவு காலை மாலை சாப்பிடவும்.

(q) கருஞ்சிற்றகத்தியிலை பசுவின்பால் விட்டு இடித்து சாறெடுத்து சமம் நல்லெண்ணெய் சேர்த்து காய்ச்சி முழுகவும்.

### சூலைக் கடுப்புக்கு

(a) வில்வ இலைச் சாறு ⅛ படி. பெருங்காயம், வெள்ளுள்ளி வகைக்கு 1 வராகனிடை அரைத்துக் கலக்கி தினம் இரு வேளை வீதம் 7 நாள் கொடுக்கவும்.

(b) கொடுவேலி வேரின் பட்டை, பரங்கிப்பட்டை, மிளகு வகைக்கு 2 பலம் பசுவின் பால் விட்டு அரைத்து 2 பலம் ஜீனிப்பாகில் போட்டு ¼ படி நல்லெண்ணெய் விட்டு கிண்டி லேகிய பாகத்தில் எடுத்து எலுமிச்சம் பழ அளவு காலை மாலை சாப்பிடவும்.

### காமாலைக்கு

(c) கையாந்தகரை, தும்பை, கீழ்வாய் நெல்லி, வகைக்கு ஒரு பிடி இடித்து சாறு பிழிந்து அதில் 15 மிளகை அரைத்து கலக்கி ¼ படி வெள்ளாட்டின் பாலின் 1/16 பலம் ஜீனி சேர்த்து தினம் 2 வேளையாக, மூன்று நாள் கொடுக்கவும்.

(d) நெல்லியிலை அரைத்து புன்னைக் காயளவு அரைத்து பசுவின் மோரில் கலக்கி 3 நாள் காலை கொடுக்கவும்.

(e) சீரகம், சங்கவேர்ப்பட்டை, பாக்களவு அரைத்து பசுவின் பாலில் கலக்கி 3 நாள் கொடுக்கவும்.

## புதிய ஜீவிய சந்தாதார்.

இவ்வருஷம் நமது "ஆனந்தனு"க்கு பூஜ்யர்-அன்பர் பூபதி தாஸர், (அன்பு மார்க்க சங்க ஸ்தாபகத் தலைவர், கொழும்பு-இலங்கை) ஜீவிய சந்தாதாரராகச் சேர்ந்துள்ள நற்செய்தியைப் பெருமகிழ்ச்சியோடு தெரிவித்துக் கொள்ளுகிறோம். நம் "ஆனந்தனை" ஆதரவு செய்யும் நோக்கத்துடன் ஆயுட் சந்தாதாரராக முன்வந்த அவருக்கு நமது மனப்பூர்வமான நன்றியறிதலைச் செலுத்துவதோடு, அவர் எல்லா நலன்களும் பெற்று இனிது வாழ அருள் புரிய வேண்டுமென்று இறைவனை இறைஞ்சுகிறோம்.

பத்திராதிபர்.

# நூதன மார்வாடி

(ஏ. ஆர். ராஜகோபாலன்.)



மெதுவாக புருஷோத்தமனும், அவனைப் பின்தொடர்ந்து வீர மார்த்தாண்டனும் வீட்டினுள்ளே பிரவேசித்தார்கள். முதல் பக்கத்தில் யாரும் காணப்படவில்லை. மெதுவாக அப்படியே நடந்து பின்கட்டிற்குச் சென்றார்கள். அப்பொழுது வீரமார்த்தாண்டனுக்கு வர வர, நரை கூடுவது போன்ற உணர்ச்சி யேற்பட்டது. இதன் காரணம் ஒன்றும் அவனுக்குப் புரியவில்லை.

சிறிது நேரத்தில் அவர்கள் 2-ம் கட்டை யடைந்தார்கள். அங்கு கூடம் போற் காணப்பட்டதொரு பெரிய விஸ்தாரமான இடம் காணப் பட்டது. அங்கு 5 அல்லது 6 முரட்டு மனிதர்கள் நின்று கொண்டிருந் தார்கள். ஒவ்வொருவனின் மடியிலும் ஒரு கூரிய கத்தி செருகப்பட் டிருந்தது. அங்கு பட்டப் பகல் போல் மின்சார விளக்குகள் பிரகாசித்துக் கொண்டிருந்ததினால், வீரமார்த்தாண்டன் அவ்விடத்தின் அமைப்பை ஒரு வாறு அறிந்து கொள்ள முடிந்தது.

அந்த விடத்திலிருந்து பின் பக்கத்திற்கு இன்னும் வழி யிருப்பதைக் கவனித்த வீரமார்த்தாண்டன் அப் பெரிய வீட்டில் குறைந்தது நான்கு கட்டுகளாவது இருக்குமென்று தெரிந்து கொண்டான். தவிர மூன்றும் கட்டிலோ அல்லது நாலாவது கட்டிலோ தான் முகமூடி யிருக்க வேண்டு மென்றும், தவிர தன் வரவை எதிர் கொண்டழைக்கவே இங்கும் 5-6 மனிதர்களை நிறுத்தி வைத்திருக்கிறு னென்றும் தெரிந்து கொண்டான்.

அப்பொழுது புருஷோத்தமன் வீரமார்த்தாண்டனைப் பார்த்து "இங்கு அதிக உஷ்ணமா யிருக்கிறதல்லவா?" என்று வினவினுன்.

வீரமார்த்தாண்டன் பதில் கூற வில்லை. ஆனுல் அங்கு நின்று கொண் டிருந்த முரட்டு மனிதர்களைக் கவனித்தான். அப்பொழுது அவர்களின் கரங்க ளெல்லாம் மடியின் பக்கத்திலிருந்தன. அவர்களுக்குத் தலைவனைப் போல் காணப்பட்ட ஒரு முரட்டு மனிதன் அவர்களின் நடுவில் நின்று கொண்டிருந்தான். அவன் முகத்தில் கடூரமும், கோபமும், பொங்கிக் கொண்டிருந்தன.

அவன் உத்திரவிற்காகக் காத்துக் கொண்டிருப்பவர்கள் போல் மற்ற முரடர்கள் நின்று கொண்டிருந்தனர்.

அப்போது அந்த முரட்டு மனிதன், இவனைக் குரோதத்துடன் பார்த்து, "நீ தானே வீரமர்ர்த்தாண்டன்? நீ தானே என் சிநேகிதர்களைக் கொன்றவன்?" என்றுன்.

அதற்குப் பதிலாக, வீரமார்த்தாண்டன் அலட்சியமாகப் புன்னகை புரிந்து தன் தலையை யாட்டினுன். ஆனுல் அதே சமயத்தில் அவனது பார்வை முரட்டு மனிதனையே மாருமல் பார்த்தது. பிறகு வீரமார்த்தாண் டன், "நீங்கள் தானே, முகமூடி யென்பவனுக்கு உதவியாளர்கள்? அவன்

பாதகச் செயல்களுக்குக் கர்த்தாக்களா யிருக்கிறீர்கள் ?" என்று வினவினான்.

மூடன்:—"உம், அதிகமாகப் பேசாதே. முதலில் உன் கைகளிரண்டையும் மேலே தூக்குவாயாக; ஏனெனில் நாங்கள் உன்னைச் சோதிக்க வேண்டும்" என்று அதிகாரமாகக் கட்டளை யிட்டான்.

உடனே வீரமார்த்தாண்டன் தன்னிரு கைகளையும் மேலே தூக்கினான். உடனே ஒரு முரட்டு மனிதன் முன்னால் வந்து வீரமார்த்தாண்டனைச் சோதிக்க வாரம்பித்தான். அப்பொழுது வீரமார்த்தாண்டனின் கூரிய பார்வையும், கம்பீரமான உருவமும், அலட்சியப் பான்மையும் அவனுக்குத் திகிலை உண்டாக்கி யிருக்கவேண்டும்! ஏனெனில் அவன் வீரமார்த்தாண்டனைச் சோதிக்கும்போது, அவனது உடம்பு பயத்ினால் கிடுகிடு வென்று நடுங்கிக் கொண்டிருந்தது.

ஆனால் அவன் வீரமார்த்தாண்டனின் மார்புப் பக்கத்திலிருந்த சட்டைப் பையில் இருந்த நான்கு சிகரெட்டுகளைத் தவிர வேறு ஒன்றையும் காணவில்லை; அதனால், பின்னால் நகர்ந்தான்.

ஆனால் அங்கிருந்தவர்களில் ஒருவனுக்காவது புருஷோத்தமனைச் சோதிக்க வேண்டுமென்ற எண்ணம் உண்டாகவில்லை. ஏனெனில் அவர்கள் புருஷோத்தமனை அபாயமற்றவனாகக் கருதினார்கள்.

வீரமார்த்தாண்டனைச் சோதித்துப், பின்னால் நகர்ந்த முரடன் வீரமார்த்தாண்டனிடம் ஒன்றுமில்லை யென்று தலைவனிடம் கூறினான்.

அப்பொழுது வீரமார்த்தாண்டனின் கண்கள் விரிந்தன. ஏனெனில் அப்பொழுதே முரட்டு மனிதர்கள் எல்லோரும் நிமிர்ந்து நின்றார்கள். அப்பொழுது அவர்கள் யாதோ வொரு கட்டளைக்குக் காத்து நிற்பவர்கள் போல் தோன்றினார்கள்.

கடைசியில் அக் கட்டளையும் வந்தது! திடீரென்று அந்தத் தலைவன், "தோழர்களே, அவனைக் கொல்லுங்கள். உங்கள் கத்திகளை அவன் தேகமெங்கும் செலுத்துங்கள்," என்று கட்டளை யிட்டான்.

வீரமார்த்தாண்டன் இதை எதிர்பார்த்துத் தானிருந்தான். இவன் இது மாதிரி நடக்குமென்று முரட்டு மனிதர்களின் மூலம் அறிந்தான். ஆகையால் கத்திகளை ஓங்கிக்கொண்டு, முரடர்கள் பாய்ந்ததும், சடேரென்று ஒரு பக்கமாக ஒதுங்கினான். அதே சமயத்தில், காற்றில் அலைந்த அவனது கருப்பு அங்கியில் நான்கு கத்திகள் பாய்ந்து, அதை ஒரு பக்கமாகக் கிழித்துக்கொண்டு போயின.

அதே சமயம் வீரமார்த்தாண்டனுக்கு நேர் எதிராக கத்தியை ஓங்கிக் கொண்டு ஒரு முரட்டு மனிதன் வேகமாக வந்தான். வீரமார்த்தாண்டன் லாகவமாக ஒதுங்கி அவனது கைகளிரண்டையும் கெட்டியாகப் பிடித்துக் கொண்டான். அப்போது வீரமார்த்தாண்டனின் இரும்புப்பிடி அம் முரட்டு மனிதனின் கையிலிருந்த கத்தியை நழுவி விழச் செய்தது.

மறு க்ஷணம் வீரமார்த்தாண்டன் அம் முரடனை அலக்காக அப்படியே தூக்கி மறு பக்கத்தில் தன்மீது பாய்ந்து வந்தவர்களின் மீது வேகத்துடன்

மோதினான். உடனே 5 முரடர்களும் ஒருவர் மேல் ஒருவர் விழுந்து புரண்டார்கள்.

அதே சமயம் தலைவன் தன்னுடைய கத்தியைத் தூக்கிக்கொண்டு, வீரமார்த்தாண்டனின் பேரில் பாய்ந்தான். இப்பொழுது வீரமார்த்தாண்டன் வலது புறமாக ஒதுங்க, உடனே முரட்டு மனிதனின் குறி தவறி விட்டது. மறுபடியும் அவன் கையைத் தூக்க முயற்சிப்பதற்குள் வீரமார்த்தாண்டனின் பலமான கைக்குத்தொன்று, அவனை அவ் வறையின் மூலைக்குத் தள்ளிச் சென்றது.

அப்போது புருஷோத்தமன், “அதோ, பின்னால் பார்!” என்று கூக்குரலிட்டான். வீரமார்த்தாண்டன் உடனே பின்னால் சடேரென்று பார்க்க, கீழே முதலில் உருண்டு வீழ்ந்திருந்தவர்கள் மறுபடியும் தங்கள் கத்திகளை ஓங்கிக் கொண்டு தன்மீது பாயத் தயாரா யிருப்பதைக் கண்டான். இப்பொழுது வீரமார்த்தாண்டனிடம், அவர்களை எதிர்ப்பதற்குரிய ஆயுதமொன்றுமில்லை. சண்டையின் ஆரம்பத்திலிருந்தே புருஷோத்தமன் விலகிக் கொண்டானாகையினாலும், இப்பொழுது புருஷோத்தமனுக்கும், வீரமார்த்தாண்டனுக்கும் உள்ள இடைவெளி அதிகமா யிருந்தமையினாலும், வீரமார்த்தாண்டனுக்கு துப்பாக்கிகளைப் பெற வழி யில்லை. இப்பொழுது அவன் தன் தேக வன்மையின் மூலமாகவும், மனோவன்மையின் மூலமாகவும் அம் முரடர்களை எதிர்க்க வேண்டியதாயிற்று.

அம் முரடர்கள் மூன்று பக்கங்களிலிருந்து இப்பொழுது வீரமார்த்தாண்டனை நோக்கி வந்தார்களாகையினால், வீரமார்த்தாண்டன் இடத்திற்காக பின் பக்கமாக நகர்ந்தான். அவன் முதுகு அப்பொழுது சுவரில் உராய்ந்தது. உடனே—அச் சுவரையே தனக்குத் தாங்குதலாக அதன் மீது சாய்ந்த வண்ணம், அப்பொழுது தனக்கு நேர் எதிரே வந்தவனின் முழங்காலைப் பார்த்து, தனது வலதுகாலால் ஓங்கி உதைத்தான். அவ்வுதை மிக வேகமாகவும், ஆனால் குறிப்பாகவும் கொடுக்கப்பட்டதனால் நேராகச்சென்று அம் முரடனின் முழங்கால் முட்டியில் சென்று தாக்க, அம்மனிதன் ‘ஐயோ’ வென்றலறிக் காலைப் பின்னிக்கொண்டு கீழே விழுந்தான். அதே சமயத்தில் இடது பக்கத்திலிருந்து வந்தவனின் கீழ்த்தாடையில் வீரமார்த்தாண்டன் வலது கை முஷ்டி பலமாகத் தாக்கவே அவனும் ஒரு மூலையில் சென்று விழுந்தான்.

இப்பொழுது வலது பக்கத்தி லிருந்தவன் தன் கத்தியை ஓங்கிக் கொண்டு வீரமார்த்தாண்டனின் பேரில் பாய்ந்தான். ஆனால் இதைக் கடைக்கண்ணால் கவனித்துக் கொண்டிருந்த வீரமார்த்தாண்டன், உடனே இடது பக்கமாக ஒதுங்கி, அதே சமயத்தில் கீழே இறங்கிய முரட்டு மனிதனின் கையைப் பிடித்துக்கொண்டான். மறுக்ஷணம் வீரமார்த்தாண்டனது இடது கை அம் முரட்டு மனிதனின் முகத்தில் நேராகத் தாக்க, உடனே அவனும், நிலையற்றுக் கீழே விழுந்தான். அப்பொழுது வீரமார்த்தாண்டன் இரணகளத்தில் வெற்றி வீரனாய் நின்றான். அவன் முகத்தில் கம்பீரலக்ஷ்மி குடி கொண்டிருந்தாள்; அவனது உதடுகளில் அலட்சியப் புன்னகை தவழ்ந்து கொண்டிருந்தது.

அப்பொழுது கீழே விழுந்தவர்களில் தலைவனாகத் தோன்றியவன் எழுந்து பின் புறத்தை நோக்கி ஓட ஆரம்பித்தான். அதைக் கண்ட வீர மார்த்தாண்டன் கீழே கிடந்த கத்திகளி லொன்றை வலது கையி லெடுத்துக்கொண்டு, ஓடிப்போய் தலைவனை இடது கையால் பிடித்துக்கொண்டான். பிறகு கத்தியை ஓங்கிய வண்ணம், "முட்டாள்! எங்கே, ஓடலா மென்று நினைக்கிறாய்? நான் இப்போது முகமூடி மனிதனைப் பார்க்க வேண்டும். உடனே முகமூடியினிடம் என்னை யழைத்துக்கொண்டு போகா விட்டால் இக் கத்தி உன் மார்பின் ஆழத்தைப் பார்த்துவிடும்" என்று கட்டளை யிட்டான்.

உடனே தலைவன், "சரி, அப்படியே செய்கிறேன்," என்று சொல்ல இருவரும் மூன்றாம் கட்டை நோக்கி நடந்தார்கள்; புருஷோத்தமன் அவர்களைப் பின் தொடர்ந்தான்.

சற்று தூரம் சென்றதும் அங்கு ஒரு பெரிய கதவு இருந்தது. அதைத் திறந்த முரட்டுமனிதன் உள்ளே போகுமாறு இவர்களை விளித்தான். உடனே தன் கையிலிருந்த கத்தியை ஒரு ஓரத்தில் தூக்கி யெறிந்து விட்டு, வீரமார்த்தாண்டன் உள்ளே கம்பீரமாகப் பிரவேசித்தான். ஏனெனில் அவன் நிராயுதபாணியாக வல்லவோ முகமூடியைப் பார்ப்பதாகச் சொல்லி யிருக்கிறான்.

ஆனால் இந்தக் கட்டில், தரையில் உஷ்ணம் அதிகமாக விருந்தது. தவிர நெருப்பு எங்கோ ஒரு பாகத்தில் கண கணவென்று கொதிப்பது போன்ற சப்தம் உண்டாயிற்று. அந்தக் கூடம் போன்ற விஸ்தாரமான இடத்தில், பாதிப்பாகம் ஒரு நீளமான கருப்புக்கம்பளியினால் மறைக்கப் பட்டிருந்தது.

அவ்வறையின் நடுவில் முகமூடி மனிதன் நின்று கொண்டிருந்தான். அவனும் வீரமார்த்தாண்டனைப்போல கருப்பு உடைகளை யணிந்து கொண்டிருந்தான். அவன் முகத்தில், யாதோ வொரு இரும்புக்கவசம் போன்றதொரு முகமூடி யிருந்தது.

இப்பொழுது வீரமார்த்தாண்டனும், முகமூடியும் ஒருவரை யொருவர் நேருக்கு நேராகச் சந்தித்தார்கள். அப்பொழுது அவர்களுடைய கண்களில், இன்னதென விவரிக்க வொண்ணாத தொரு ஒளி பரவி யிருந்தது.

சுமார் 5 நிமிஷநேரம் வரையில் ஒருவரை யொருவர் முறைத்துப் பார்த்துக் கொண்டிருந்தனர். கடைசியில் முகமூடி முதலில் பேசினான்:— அரசகேசரியே! வரவேண்டும், வரவேண்டும். தங்களைப் பார்ப்பதன் மூலம் எனக்கு மட்டற்ற மகிழ்ச்சி யுண்டாகிறது. தங்களிடம் தகுந்த சாமர்த்தியங்கள் இருப்பதனால் தான் தங்களைக் கண்டு ஜனங்கள் பயப்படுகிறார்கள். நீங்கள் வெகு சாமர்த்தியமாக, என்னுடைய இறந்த ஆட்களில் ஒருவனை தங்களுடைய மேக்கப்பின் மூலம், நிஜ அரசகேசரியைப்போல் தோன்றும்படி செய்வித்து, "அரசகேசரியின் மரணம்," என்ற தலைப்புடன் பத்திரிகைகளில் விஷயம் வரும்படியாகச் செய்தீர்கள். ஆனால் அதை நம்புவதற்கு நான் முட்டாளில்லை. ஏனெனில் நானே அவனை அரசகேசரியின் வேஷத்தில் அனுப்பினேன்," என்றான்.

(தொடரும்.)

# சித்திரபானுவருஷ புரட்டாசிமீ நவக்கிரக நிராயன சுத்த ஸ்புடம்

(இந்தியா ஸ்டாண்டர்ட் கடியார மணி-சென்னை காலை 7-மணிக்கு)

| [illegible] | சந்திர ஹோரை | | | சூரியன். | | சந்திரன். | | அங்காரகன். | | புதன் | | குரு. | | சுக்கிரன். | | சனி | | ராகு. | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | ம | நி | ச. | பா. | க. | பா. | க. | பா. | க. | பா. | க. | பா. | க. | பா. | க. | பா | க. | பா. | க. |
| 1 | 23 | 41 | 08 | 150 | 11 | 231 | 32 | 157 | 15 | 176 | 47 | 86 | 25 | 135 | 23 | 50 | 00 | 129 | 38 |
| 2 | 23 | 45 | 05 | 151 | 09 | 245 | 42 | 157 | 54 | 177 | 39 | 86 | 34 | 134 | 37 | 50 | 00 | 129 | 36 |
| 3 | 23 | 49 | 02 | 152 | 08 | 259 | 53 | 158 | 33 | 178 | 32 | 86 | 44 | 137 | 52 | 50 | 00 | 129 | 32 |
| 4 | 23 | 52 | 59 | 153 | 07 | 273 | 16 | 159 | 11 | 179 | 39 | 86 | 53 | 138 | 06 | 50 | 00 | 129 | 29 |
| 5 | 23 | 56 | 55 | 154 | 06 | 288 | 39 | 159 | 50 | 180 | 06 | 87 | 02 | 140 | 20 | 49 | 59 | 129 | 26 |
| 6 | 0 | 00 | 52 | 155 | 04 | 302 | 39 | 160 | 28 | 180 | 48 | 87 | 10 | 141 | 33 | 49 | 59 | 129 | 23 |
| 7 | 0 | 04 | 48 | 156 | 03 | 316 | 40 | 161 | 07 | 181 | 30 | 87 | 19 | 142 | 47 | 49 | 58 | 129 | 19 |
| 8 | 0 | 08 | 45 | 157 | 02 | 330 | 07 | 161 | 45 | 181 | 51 | 87 | 27 | 144 | 01 | 49 | 58 | 129 | 16 |
| 9 | 0 | 12 | 41 | 158 | 01 | 343 | 35 | 162 | 24 | 182 | 12 | 87 | 36 | 145 | 15 | 49 | 57 | 129 | 13 |
| 10 | 0 | 16 | 38 | 158 | 59 | 356 | 39 | 163 | 02 | 181 | 42 | 87 | 44 | 146 | 29 | 49 | 57 | 129 | 10 |
| 11 | 0 | 20 | 34 | 159 | 58 | 9 | 44 | 163 | 41 | 181 | 12 | 87 | 53 | 147 | 43 | 49 | 56 | 129 | 06 |
| 12 | 0 | 24 | 31 | 160 | 57 | 22 | 14 | 164 | 19 | 180 | 42 | 88 | 01 | 148 | 56 | 49 | 56 | 129 | 03 |
| 13 | 0 | 28 | 27 | 161 | 56 | 34 | 44 | 164 | 58 | 180 | 12 | 88 | 10 | 150 | 10 | 49 | 55 | 129 | 00 |
| 14 | 0 | 32 | 24 | 162 | 55 | 46 | 52 | 165 | 36 | 179 | 35 | 88 | 17 | 151 | 18 | 49 | 55 | 129 | 57 |
| 15 | 0 | 36 | 20 | 163 | 54 | 59 | 00 | 166 | 14 | 178 | 58 | 88 | 25 | 152 | 32 | 49 | 54 | 128 | 53 |
| 16 | 0 | 40 | 17 | 164 | 54 | 71 | 08 | 166 | 52 | 178 | 14 | 88 | 31 | 153 | 39 | 49 | 54 | 128 | 50 |
| 17 | 0 | 44 | 13 | 165 | 53 | 83 | 16 | 167 | 30 | 177 | 30 | 88 | 38 | 154 | 47 | 49 | 54 | 128 | 47 |
| 18 | 0 | 48 | 10 | 166 | 52 | 95 | 23 | 168 | 08 | 176 | 56 | 88 | 44 | 155 | 59 | 49 | 54 | 128 | 44 |
| 19 | 0 | 52 | 06 | 167 | 51 | 107 | 31 | 168 | 46 | 176 | 22 | 88 | 51 | 157 | 02 | 49 | 54 | 128 | 41 |
| 20 | 0 | 56 | 03 | 168 | 50 | 119 | 50 | 169 | 24 | 175 | 28 | 88 | 57 | 158 | 09 | 49 | 54 | 128 | 38 |
| 21 | 0 | 59 | 59 | 169 | 49 | 132 | 09 | 170 | 02 | 174 | 34 | 89 | 04 | 159 | 17 | 49 | 54 | 128 | 35 |
| 22 | 1 | 03 | 56 | 170 | 49 | 145 | 09 | 170 | 40 | 173 | 50 | 89 | 10 | 160 | 24 | 49 | 54 | 128 | 32 |
| 23 | 1 | 07 | 53 | 171 | 48 | 158 | 10 | 171 | 18 | 173 | 06 | 89 | 17 | 161 | 32 | 49 | 54 | 123 | 29 |
| 24 | 1 | 11 | 50 | 172 | 48 | 171 | 32 | 171 | 56 | 172 | 22 | 89 | 23 | 162 | 42 | 49 | 51 | 128 | 26 |
| 25 | 1 | 15 | 46 | 173 | 47 | 184 | 55 | 172 | 34 | 171 | 38 | 89 | 29 | 163 | 52 | 49 | 47 | 128 | 22 |
| 26 | 1 | 19 | 43 | 174 | 47 | 198 | 46 | 173 | 12 | 170 | 54 | 89 | 29 | 165 | 35 | 49 | 43 | 128 | 19 |
| 27 | 1 | 23 | 39 | 175 | 47 | 212 | 38 | 173 | 50 | 170 | 10 | 89 | 38 | 166 | 19 | 49 | 39 | 128 | 15 |
| 28 | 1 | 27 | 36 | 176 | 47 | 226 | 48 | 174 | 28 | 169 | 29 | 89 | 43 | 167 | 32 | 49 | 36 | 128 | 12 |
| 29 | 1 | 31 | 32 | 177 | 46 | 240 | 58 | 175 | 07 | 168 | 48 | 89 | 48 | 168 | 45 | 49 | 32 | 128 | 09 |
| 30 | 1 | 35 | 29 | 178 | 46 | 255 | 12 | 175 | 45 | 168 | 04 | 89 | 53 | 169 | 58 | 49 | 28 | 128 | 06 |

## ஆகாயக் காட்சி.

18-ந் தேதி பின் இரவு மணி-5, நிமிஷம் 45-க்கு (14-ந் தேதி விடியு முன்-உதயக்கால பொழுது) தெற்கில் பாகை 1-ல் சனி-சந்திர சமாகமம்.

17-ந் தேதி முன் இரவு மணி-11, நிமிஷம் 40-க்கு வடக்கில் பாகை-3 கலை 30-ல் குரு-சந்திர சமாகமம்.

# " ஆனந்தபோதினி " பஞ்சாங்கம்.

சித்திரபானுஸ்ரீ புரட்டாசிமீ—கலியுகாதி 5044, சாலிவாகனம் 1865,
பசலி 1352, கொல்லமாண்டு 1118, ஹிஜரா 1361,
இங்கிலீஷ் 1942ஸ்ரீ செப்டம்பர்மீ—அக்டோபர்மீ

| புரட்டாசி | செப்டம்பர் | வாரம். | திதி. | நக்ஷத்திரம் | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 17 | வியா | சப்1-24 | கே36-1 | பி36-1சி | க்ஷடசீதி புண்ணியகாலம் |
| 2 | 18 | வெள் | அஷ்5-23<br>நவ58-24 | மூல31-48 | அ31-48பி | அவமாகம், தசாவதார விரதாரம்பம் |
| 3 | 19 | சனி | தச53-25 | பூரா27-36 | சித்60 | க்ஷீர விரதாரம்பம் |
| 4 | 20 | ஞா | ஏகா47-23 | உத்24-1 | அமி60 | பரிவர்த்தன ஏகாதசி |
| 5 | 21 | திங் | து42-36 | திரு20-23 | அ20-23சி | கல்கி துவாதசி, மாடுவாங்க |
| 6 | 22 | செவ் | திர38-23 | அவி17-24 | அ17-24சி | பிரதோஷம், மருந்துண்ண |
| 7 | 23 | புத | சது34-48 | சத15-1 | சி15-1அ | அனந்தபத்மநாப சதுர்த்தசி |
| 8 | 24 | வியா | ப○32-25 | பூர14-25 | சித்60 | ○ உமாமகேஸ்வர விரதம் |
| 9 | 25 | வெள் | பிர31-13 | உட்14-24 | சி14-24அ | மாஹாளயபக்ஷாரம்பம் |
| 10 | 26 | சனி | துதி30-37 | ரே15-1 | ம15-1சி | அசூன்யசயன விரதம் |
| 11 | 27 | ஞா | திரு31-11 | அசு17-24 | சித்60 | பிரஹத்யுமா விரதம் |
| 12 | 28 | திங் | சது34-12 | பர✻21-0 | சி21-0அ | கிருத்திகை விரதம் |
| 13 | 29 | செவ் | பஞ்37-37 | கிரு36-25 | சி26-25அ | |
| 14 | 30 | புத | சஷ்42-1 | ரோ31-48 | சித்60 | |
| 15 | 1 | வியா | சப்46-48 | மிரு37-47 | மர60 | |
| 16 | 2 | வெள் | அ52-11 | திரு44-25 | சித்60 | |
| 17 | 3 | சனி | நவ57-0 | புன50-24 | சித்60 | |
| 18 | 4 | ஞா | தச60 | பூச56-24 | சித்60 | |
| 19 | 5 | திங் | தச1-48 | ஆயி60 | சித்60 | |
| 20 | 6 | செவ் | ஏகா5-24 | ஆயி1-48 | சித்60 | |
| 21 | 7 | புத | து7-11 | மக5-25 | சி25-அ | |
| 22 | 8 | வியா | திர8-23 | பூர7-47 | சி7-47ம | விஷசாஸ்திரஹதன மாளய |
| 23 | 9 | வெள் | ச● [illegible]-24 | உத்9-0 | சி9-0அ | சர்வத்திர அமாவாசை, சர்வ பிதுரு மாளய அமாவாசை |
| 24 | 10 | சனி | அமா7-11 | அஸ்9-1 | மர60 | நவராத்திரி ஆரம்பம் |
| 25 | 11 | ஞா | பிர4-48 | சித்8-24 | சித்60 | ஆஸ்வீஜ சுத்தம், எருவிட |
| 26 | 12 | திங் | துதி1-12<br>திரு56-24 | சுவா6.36 | அ6-36ம | அவமாகம், மாடுகொள்ள, வியாதியஸ்தர் மருந்துண் |
| 27 | 13 | செவ் | சது51-1 | வி3-36 | ம3-36சி | மாச சதுர்த்தி விரதம் |
| 28 | 14 | புதன் | பஞ்45-57 | அ0-37<br>கே56-1 | சி0-37ம | அவமாகம், உபங்கா லலிதா கௌரி விரதம் |
| 29 | 15 | வியா | சஷ்39-36 | மூல52-28 | சித்60 | கரிநாள், சஷ்டி விரதம் |
| 30 | 16 | வெள் | சப்33-35 | பூரா48-36 | பி48-36சி | சத்தியபிரயாண தீர்த்த புண்ணியதினம் |

(1942ஸ்ரீ அக்டோபர்மீ)

| | | | |
|---|---|---|---|
| | | சனி | குரு |
| கே | 4-துலா-புத<br>12-கன்-சுக்<br>13-கன்-புத | | |
| | | | ராகு<br>சுக் |
| | | | சூ-பு<br>அங் |

EDITED, PRINTED & PUBLISHED BY N. MUNISAWMY MUDALIAR,
AT THE " ANANDA BODHINI " PRESS,
No. 6, LAWYER CHINNATHAMBI MUDALI STREET, MADRAS.

## பூவுலக வாழ்க்கைக்கு இன்றியமையாத சிங்கபலத்தைத் தருவதேது?

முறையாய்ச் செய்த அயக்காந்த செந்தூரத்தைக்காட்டிலும் தேகபலத்தைத் தரும் ஔடதம் வேறொன்றுமில்லை.




விளம்பரம். இதைக் கண்ணுறும் கனவான்களே! இந்த லேகிய செந்தூரங்கள் சாமான்யமானவையல்ல. அபாரமான பலத்தைத் தரக்கூடிய சக்தி அமைந்துள்ளவை. உறுதியாய் இவற்றை நம்பி வாங்கிச் சாப்பிட்டால் ஒரு தடவையிலேயே இவற்றின் குணம் நன்கு விளங்கும்.

இந்த லேகிய செந்தூரங்களால் நிவர்த்தியாகும் முக்கிய வியாதிகளாவன :—

தற்காலத்தில் மனிதரின் பால்ய சேஷ்டையாலும், இரத்தப் போக்காலும் அவருக்கு உண்டான 20 வகை மேகரோகங்கள், சூலரோகம், குன்மரோகம், பித்தபாண்டு, கை கால் முடக்கு, ஓடுவாய்வு, பித்த வெப்பம், நெஞ்சு தொண்டை எரிச்சல், வயிற்றுப்பிசம் அஜீரணம், பசியில்லாமை, தாதுநஷ்டம், தேக உளைச்சல், கண்ணில் நீர்வடிதல், சோம்பல், நித்திரையில்லாமை, தலை சுழற்றல், நீர் இறங்கும்போது பொறுக்கமுடியாத பாதையைத் தரும் நீர்மேகம் முதலியவைகள் ஆச்சரியப்படத்தக்க விதமாய் நீங்கிவிடும். பயங்கரமான மேக சம்பந்த வியாதிகளைப் பத்தே வேளையில் போக்கிச் சப்த நரம்புகளுக்கும் முறுக்கேற்றி அபரிமிதமான இரத்த விருத்தியைப் பெருக்கி பலத்தைத் தருவதில் இதற்குமிஞ்சின இலேகிய பஸ்பம் வேறொன்றுமில்லை என்று நாம் உறுதியாகச் சொல்லுவோம். இதல்லாமல் தேகத்தைப் புஷ்டியாக்கித் தேகத்தடிப்பு கக்கன் [illegible]

களைக் கண்டித்து தினந்தோறும் மலத்தை தாராளமாய்ப் போக்குவதில் இந்தலேகிய செந்தூரங்களே முதன்மையானது யென்பதை நாம் எமது அநுபவத்தில் கண்டிருக்கிறோம். நிற்க இந்த லேகிய செந்தூரங்கள், மேற்கண்ட வியாதிகளைக் கண்டிப்பாய் நிவர்த்திக்குமா என்னும் சந்தேகமுடையோர் பரீக்ஷார்த்தமாக முதலில் 48-நாளாவது வாங்கி யுண்டால் இவற்றின் அபார குணம் தெரியவரும். தவிர யாங்கள் இம்மகத்துவம் பொருந்திய லேகிய செந்தூரங்களை எவ்வளவு சிறப்பித்துக் கூறியபோதிலும் அது தகும். மேலும் இவற்றை நோய் உள்ளவரே தான் சாப்பிடவேண்டும் என்ற அவசியமில்லை; யாவரும் சாப்பிடலாம். நோய் உள்ளவர்களைவிட நோய் இல்லாதவர்கள் எண்ணிக்கையாக 48-நாள் இந்த லேகிய செந்தூரங்களை யாதும் பத்தியமின்றிச் சாப்பிட அவர்க்கு நல்ல பலம் ஏற்படும். இது தவறாது. இவற்றைத் தருவித்து நண்பர் எண்ணிக்கையாகச் சாப்பிட்டு 10-நாளைக்குள் குணம் இல்லாவிடில் உடனே தெரியப்படுத்தினால் கட்டாயம் இவற்றிற்கு வாங்கிய பணம் வாப்ஸ் செய்யப்படும். தவிர மேற்காட்டிய நோய்கள் உடையோர் 48-நாட்கள் சாப்பிடுவார்களேயானால் அவை முழுதும் நீங்கிவிடும். அப்படி நீங்கிக் குணம் ஏற்படாவிடில் நாங்கள் அதற்கு உத்தரவாதிகளாவோம். யாங்கள் இவ்வளவு அருமையான லேகிய செந்தூரங்களை எவ்வளவோ சிரத்தையுடன் கஷ்டப்பட்டு முடித்துப் பரோபகாரார்த்தமாக வெளியிட்டோம். இவ்வருமை வாய்ந்த லேகிய செந்தூரங்களுக்குப் பொன்மெடல், வெள்ளிமெடல், பெற்றதல்லாமல் ஆயிரக்கணக்கான யோக்கியதாம்ச பத்திரங்களும் பெற்றிருக்கின்றோம். ஆதலின் நமது லேகிய செந்தூரங்கள் நாம் சொன்னபடி குணத்தைக் கொடுக்கும் என்பதைப்பற்றி ஜவாப்தாரியாக யிருக்கக் காத்துக் கொண்டிருக்கிறோம்; இது உண்மை. இவற்றை ஒரே தரம் தருவித்துப் பாருங்கள்; எமது உண்மை விளங்கும்.

வாதாதிக்க தோஷத்தினாலாவது, துராப்பியாசத்தினாலாவது, அதிக மனக்கவலையினாலாவது, அடிக்கடி உண்டாகும் நோயினாலாவது, மற்றெந்த காரணத்தினாலாவது பலமிழந்தவர்கள் எண்ணிக்கையாக டை லேகிய செந்தூரங்களைப் புசிப்பார்களானால் இவை தேகாரோக்கியம், வலிமை, அழகு முதலியவற்றை அவர்க்குக் கொடுத்து அவர்களைச் சந்தோஷிக்கச் செய்யுமென்பதில் தடையில்லை. வெளியூர்க் கனவான்கள் இந்த லேகிய செந்தூரங்களில் முழு நம்பிக்கை வைத்து ஒரே ஒருதரம் இவற்றைப் பரீக்ஷிப்பார்களானால், அவர்கள் அவசியம் ஆனந்தமடைவார்கள்.

இந்த லேகிய செந்தூரங்களுக்குப் பத்தியமே கிடையாது. எந்தப் பலகாரங்களையும் நீக்குதலின்றி சாப்பிடலாம். மருந்து சாப்பிடும்போது பசி அதிகமாய் எடுக்கும் ஆதலால் பச்சைப்பயற்றுக் குழம்பு, ரசம், மரிச கண்ட குப்பு, இவைகளை அதிகமாகப் பசியைத் தணிக்கக்கூடிய விதமாகத் தாமதம் செய்யாமல் சாப்பிடல் வேண்டியது. இவற்றைப் புசிக்கும் போதெல்லாம் பலகாராதிகள் சாப்பிடல் வேண்டும். தயிர், பால் முதலியவைகள் எவைகளாயிருந்தாலும் சந்தேகமின்றி சாப்பிட்டு வரலாம்.

இவ்வருமை வாய்ந்த லேகிய செந்தூரங்களை மட்டும் ஒருவர் தருவித்து எண்ணிக்கையாக 48-நாள் சாப்பிடுவாரே யானால் இவை தேகத்தில் வாதமுற்ற, மேகமெல்லாம் சூரியனைக்கண்ட பனிபோல் நீங்கி அவர் தேகமானது வளர்த்துப் புதிய ரத்தம் பாவி தன் வாழ்நாள் பரியந்தம் இன்பமாகவிருக்கும். இவற்றைப் புருஷன் பெண்சாதி இருவரும் ஏககாலத்தில் ஒத்துமையாய்ச் சாப்பிட்டு வந்தார்களேயானால், அவர்க்கு உதிக்கும் மக்கள் மிகுந்த

தேஜஸோடு தோன்றுவார்கள். இது உண்மை. இதை அதிகம் எழுதுதல அனுவசியம். இந்தியா, ஸிலோன் ஆகிய உள் நாடுகளுக்கு 24-நாள் சாப்பிடக்கூடிய லேகியமும் செந்தூரமும் விலை ரூ. 1-12-0. போஸ்டேஜ் அணு 8. ஒரே தடவை 48-நாள் மருந்து வாங்குவோர்க்கு போஸ்டேஜ் உள்பட ரூ.4.

பர்மா, பினங்கு, சிங்கப்பூர், செட்டால் முதலிய அயல்நாடுகளுக்கு 24 நாள் சாப்பிடக்கூடிய மருந்து விலை ரூ. 1-12-0. தபாற்கூலி ரூ. 1-4-0.

48-நாள் மருந்து வாங்குவோருக்கு போஸ்டேஜ் உள்பட ரூபா 5-8-0 சிங்கப்பூர், பினங்கு, மலாக்கா முதலிய வெளிநாடுகளுக்கு வி. பி. ஆர்டர் இருந்தாலும் முன்பணம் அனுப்பாதவர்களுக்கு மருந்து அனுப்பப்பட மாட்டாது.

## விலாசம்:—லேகியம் டிபோ,

## நெ. 6, வெங்கடேச மேஸ்திரி தெரு, மதராஸ்.

---

# நரை மயிர் கருக்குந் தைலம்



தற்காலத்தில் பலவிதமாகச் செய்து விற்கப்பட்டு வருகிற கப்புகள மயிரைச் செம்பட்டையாகவும், பசுமை நிறமாகவும், சாம்பல் வர்ணமாகவும் ஆக்கி விகாரப்படுத்தி விடுகின்றன. நமது தைலமோ நரைத்த மயிருக்குப் பூசிய 3 நிமிஷத்திற்குள்ளாக நரைப்பதற்கு முன்பிருந்த கருமை நிறத்தையும் பளபளப்பையும் உண்டுபண்ணும். மேலே கூறியுள்ள விகார குணங்கள் இதில் உண்டாகமாட்டா. இதைப் பூசிய பிறகு முகலட்சணமும் வசீகரமு முண்டாகிறபடியால் வயோதிகரும் வாலிபரைப்போல் தோற்றப்படுவார்கள். இதை உபயோகிக்கும் விதம் பார்சலோடு தெரிவிக்கப்படும். இதன் விலை ரூபா 1.

## கர்ணபிந்து



காதில் சீழ் வடிதல், காது குத்தல், காது கேளாதிருத்தல், காதில் ஙமைச்சல் முதலிய வியாதிகளுக்கு இந்த மருந்தில் 2-துளி காலை மாலைகளில் காதில் விட்டுவர, காதிலுள்ள ரோய்களெல்லாம் நீங்கிவிடும். புட்டி 1-க்கு அணு 4. வி. பி. தபால்கூலி வேறு.

## (காட்லீவர் ஆயில்) மீன் எண்ணெய்

இது பலத்தை உண்டாக்குகிறது. தவிர இரும்பினுல் உண்டாகும் இளைப்பையும் அடக்கும். இளைத்தவர்கள் உபயோகித்தால் தேகம் புஷ்டியாகும், இரத்தத்தைச் சுத்தி செய்யும், சுவாசகாசங்களின் ரோகத்தை குணப்படுத்தும், சரீரத்திலுடைய ஒவ்வொரு பாகத்துக்கும் பலத்தைக் கொடுக்கும். இதைக் குழந்தைகளுக்கும் கொடுக்கலாம். புட்டி 1-க்கு விலை ரூபா 1—8—0.

---

தனலட்சுமி கம்பெனி, 6, [illegible] தெரு, [illegible]

# ஜீவாதார சஞ்சீவி திராவகம்

இது தங்கம், அயம், மற்றும் சில சத்துப் பொருள்களைச் சேர்த்து அநுபோக முறையில் தயார் செய்யப்பட்டதாகும். சரீரத்திலுள்ள தசநாடிகளும் தளர்ந்து பலங் குறைந்து அகால மரணத்துக் குள்ளாகும் கொடிய விபத்துக்கு இத்திராவகம் கைகண்ட சஞ்சீவியைப் போன்றது. இது சரீரத்திற்கு சுகத்தைக் கொடுத்து, ஆயுளை விருத்திசெய்து, பலவீனம், கைகால் ஓய்ச்சல், சோம்பல், தேகம் மெலிதல், ஜீரணக் குறைவு, புளியேப்பம், பசியின்மை, ஞாபகக் குறைவு, தைரியமின்மை, தாது நஷ்டம், கண்டமாலை, மலச்சிக்கல், நரம்புத் தளர்ச்சி, மார்நோய், சரீரம் வெளுத்தல் முதலிய வியாதிகளை ஒரு வாரத்திற்குள் மாந்திரீகம்போல் குணப்படுத்தும். இது வரையில் எந்த வைத்தியர்களாலும் கண்டுபிடிக்கப்படாத அவுஷதம் இதுவே என்பதை இதை உட்கொண்ட ஐந்து நிமிஷத்தில் தெரிந்து கொள்ளலாம். குழந்தைகள் முதல் பெரியோர்கள் வரையிலும் உபயோகிக்கலாம். புட்டி 1-க்கு விலை ரூ. 1. புட்டி 3-க்கு விலை ரூ. 2—8—0.



# மோஹினி பரிமள கூந்தல் தைலம்



இந்தத் தைலத்தை கூந்தலில் தடவிக் கொண்டால் அன்று மலர்ந்த புஷ்பங்களின் வாசனைக்கு நிகராயிருக்கும். கூந்தலுக்கு வளர்ச்சியைத் தருவதுடன் தலைக் கொதிப்பையும் அடக்கி தேகத்திற்கு ஆரோக்கியத்தைத் தரவல்லது. இதன் விலை அணா 12.

## சுகபேதி மாத்திரை

இந்த மாத்திரையில் 2-முதல் 4-வரையில் தேகதிடமறிந்து சாப்பிட்டால் சுகமாய்ப் பேதியாகிவிடும். இம் மாத்திரையை சிறு குழந்தைகளுக்கு 1-மாத்திரை முதல் தேகதிடமறிந்து முலைப்பாலில் உபயோகிக்கலாம். வாய்க்கசப்பு, கொமட்டல், நெஞ்சு கரகரப்பு, வாந்தி, வயிற்றுவலி முதலிய எவ்வித கெட்ட குணம் கிடையாது. உபயோகிக்கும் விதம் மருந்துடன் அனுப்பப்படும்.

24-மாத்திரை புட்டி 1-க்கு விலை அணா 4.

---

[illegible] கம்பெனி, நெ. 6, லாயர் சின்னதம்பி முதலி தெரு, மதராஸ்

# அயத்தங்கத் திராவகம்

மித்திரர்களே! இந்த அபூர்வ மருந்தானது அநேக கொடிய வியாதிகளை ஆச்சரியமாகக் கண்டிக்கக் கூடியது. இதை அநேக ஆயிரக் கணக்கான ஜனங்கள் உபயோகித்துச் சந்தோஷிக்கின்றனர். வியாதியினாலாவது வேறு எந்தக் காரணத்தினாலாவது இளைத்துப்போயிருக்கும் தேகத்தைப் புஷ்டியாக்கி பலவிருத்தி தருவதில் இது நிகரற்ற மருந்தாகும். ஆங்கிலேய முறைப்படி தயாரிக்கப்பட்ட அருமையான மருந்து. சாப்பிடுவதற்கு மிக இன்பமாயிருக்கும். இருமல் நோய்கண்டு அவஸ்தைப்படுபவர்கள் இதை உட்கொண்டால் இரண்டே வேளையில் ஆச்சரியமான சுகத்தை யடைவார்கள். இதனால் உண்டாகக்கூடிய அநேக குணங்களில் முக்கியமான சிலவற்றை இங்கே குறிக்கிறோம்.



இது, நரைத்த மயிரைக் கருப்பாக்கும், உஷ்ணத்தினாலாவது, புழு வெட்டினாலாவது மயிர் உதிர்வதை நிறுத்தும்; இதனால் நீர் வியாதிகள் தீரும். கண்ணெரிச்சல், கைகால் காந்தல் இவை தீரும். இன்னும் இது முக வசீகரத்தை உண்டாக்கும். தேக அசதியை யோட்டும். ஜீரண சக்தியையும், நல்ல பசியையும் உண்டாக்கும். மனதை அதிக உற்சாகப்படுத்தும், நரம்புகளுக்கு அதிக வலுவைத் தரும், தேகத்தில் நல்ல இரத்தத்தைச் சுரப்பிக்கும், க்ஷயரோகத்தை க்ஷணத்தில் தீர்க்கும், சத்த தாதுக்களுக்கும் நல்ல பலத்தைத் தரும், மூலச்சூடு, மூலவாய்வு, மலச்சிக்கல் ஆகியவை தீரும்.

இந்தச் சஞ்சீவியை நல்ல போஜனத்துடன் 15 நாள் சாப்பிட்டால் இணையில்லாத ஆனந்தத்தைத் தரும். மனிதர் தாம் இழந்துபோன தேகதிடத்தைப் பழையபடி யடைவதற்கு இதைவிட வேறு மருந்தே கிடையாது. ஒருவர் 40-நாள் மருந்தை உட்கொள்ளும்பக்ஷத்தில் அவனுடைய தேகம் வஜ்ஜிரமேயாகும். இதற்கு யாதொரு பத்தியமும் கிடையாது.

20-நாள் மருந்து விலை ரூபா 1. 40-நாள் மருந்து விலை ரூபா. 1-12-0.

## காசா

காசம், இருமல், க்ஷயம் முதலிய வியாதிகளுக்கு நல்ல சிறந்த ஔஷதமாகும். (இம் மருந்து மலையாள அஷ்டாங்க முறைப்படி) மலையாளத்தில் அநேகவிதமான வனமூலிகை உலோக வஸ்துக்களைக் கொண்டு முறைப்படி தயார் செய்தது. பத்தியமின்றி சாப்பிடலாம்.

30 நாள் 60 வேளை மருந்து விலை ரூபா 2—8—0.

## எலிக்ஸ்ரைன்

பத்தியம் கிடையாது. ருசிகரமானது. இரத்த சுத்திக்கும் இரத்த விருத்திக்கும், தசை விருத்திக்கும், தாது பலத்திற்கும் இது ஒரு அமிர்த சஞ்சீவியாகும்.

20 நாள் மருந்து 40 வேளைக்கு உபயோகிக்கக்கூடியது. பூரண குணத்துக்குப் போதுமானது. விலை ரூபா 2—4—0.

---

தனலட்சுமி கம்பெனி, 6, லாயர் சின்னதம்பி முதலி தெரு, மதராஸ்.

# நாராயண சஞ்சீவித் தைலம்

இத்தைலம் முழுவதும் பச்சிலைகளாலும், பசும்பால் முதலிய சிரேஷ்டமான வஸ்துக்களாலும் ஆயுர்வேத முறைப்படி மிகப் பரிசுத்தமாகத் தயார் செய்யப்பட்டது. இத்தைலத்தில் ஸ்நானம் செய்வதினால் தலைவலி, ஒற்றைத் தலைவலி, மண்டையிடி, மண்டைக்குத்தல், கண் எரிச்சல், கண்களில் நீர் வடிதல், சாலேஸ்வரம், காதுநோய், தலைபாரம், அதிக வெய்யிலினால் உண்டாகும் சிரரோகங்கள், சரீரதாபம், மூளைக்கொதிப்பு முதலியவைகள் ஆச்சரியப்படும் விதமாய்த்தீரும். தொடர்ச்சியாய்ச் செய்துவரும் இதன் ஸ்நானங்களினால் நரைத்த மயிர் கருத்துவிடும். மூளையைக் குளிரப்பண்ணி அறிவையும் திடச் சித்தத்தையும் உற்சாகத்தையும் உண்டு பண்ணுவதில் இது நிகரற்றது. சாராய சத்து முதலிய ஆங்கில வாசனைகள் இதில் சேர்க்கப்படவில்லை. சுத்தமான பச்சிலை, கிழங்கு புல் முதலிய இந்திய வாசனைகளே சேர்க்கப்பட்டிருக்கின்றன. தினம், இதனைத் தலையில் தடவி வாரி வருவதினால் மயிர் கருப்புப் பட்டைபோல் பளபளப்பாகக் கருத்து ஆலம் விழுதுபோல் நீண்டு வளரும். இன்னும் இது, உஷ்ணத்தைத் தணித்து ஞாபக சக்தியையும், முகவசீகரத்தையும் உண்டாக்கும். கஷ்டப்பட்டு வேலை செய்தவர்களும் வெகுதூரம் நடந்தவர்களும் படுக்கும்போது சிறிது தைலத்தை உள்ளங்கை உள்ளங்கால்களில் தேய்த்துக்கொண்டால் காலையில் எழுந்திருக்கும்போது தேகம் ஆரோக்கியமாய் இருக்கும். 5 பலம் டின் 1-க்கு ரூபா 1. தபால் சார்ஜ் பிரத்தியேகம்.



# கூந்தல் வளரும் துளி

இதை நல்லெண்ணெய் அல்லது தேங்காயெண்ணெயில் கலந்து பிரதிதினம் மயிருக்குப் பூசிவந்தால் கூந்தலானது ஆலம் விழுதுபோல் உண்மையாய் வளரும். அதில் பேன் சேராது; சுண்டு உண்டாகாது; மயிர் உதிராது. வழுக்கை விழுந்த இடத்திலும் மயிர் முளைக்கும். புட்டி 1-க்கு அணா 12. தபாற்கூலி வேறு.



# ருதுக நிவாரணி மாத்திரை

ஸ்திரீகளுக்கு மாதாந்திர பஹிஷ்டை (ருது) கிரமமாக வெளிப்படாமல் காலந் தவறி வெளிப்படுதல், சிலகாலம் வெளிப்படாமலே யிருத்தல், வயிற்றுவலி, ஜ்வரம், மார்பு நோய், மயக்கம், கழுத்திசிவு, ஜன்னி தோஷங்கள், மஞ்சட் காமாலை, உணர்ச்சியின்றி சிறுநீர் பெருக்கெடுத்தல், மூர்ச்சையாகுதல், மார்பு படபடவென்று அடித்துக்கொள்ளுதல், மேல்மூச்சு வாங்குதல், மர்மஸ்தானத்தில் பொறுக்கமுடியாத வேதனை உண்டாகுதல் இன்னும் மாதர்களுக்குக் காணும் ருது சம்பந்தமான எல்லா வியாதிகளையும் கண்டித்து கருப்பகோசத்தைச் சரிப்படுத்திச் சந்தான விருத்தியை உண்டாக்கும், ஒரு டப்பி மாத்திரை விலை ரூபா 1.



# நூதன தமிழ் நாவல்களும் கதைப் புத்தகங்களும்.

ஆரணி-குப்புசாமி முதலியார் இயற்றியவை.

| | ரூ. | அ. |
|---|---|---|
| ஞானசெல்வாம்பாள் 5பாகம் | 9 | 10 |
| கற்பகச் சோலையின் அற்புதக் கொலை ... | 1 | 4 |
| கடற்கொள்ளைக்காரன் 2பாகம் | 3 | 4 |
| மதரூம்பாள் 2-பாகம் ... | 3 | 0 |
| லோகநாயகி ... | 1 | 0 |
| விளையாட்டுச் சாமான் ... | 1 | 6 |
| பவளத்தீவு 2-பாகங்கள் ... | 3 | 0 |
| தபால்கொள்ளைக்காரர்கள் ... | 0 | 14 |
| அமராவதி 2-பாகங்கள் ... | 4 | 0 |
| மஞ்சள் அறையின் மர்மம் ... | 1 | 8 |
| கற்கோட்டை ... | 2 | 0 |
| பூங்கோதை ... | 0 | 10 |
| வீரநாதன் ... | 0 | 12 |
| கனகபூஷணம் 2-பாகமும் ... | 3 | 8 |
| கமலசேகரன் ... | 1 | 12 |
| தினகரசுந்தரி ... | 1 | 0 |
| ரத்தினபுரிரகசியம் 9பாகமும் | 18 | 2 |
| சந்திராபாய் ... | 2 | 0 |
| இராஜாமணி ... | 2 | 0 |
| இரத்தினபாய் ... | 1 | 12 |
| மதனபூஷணம் ... | 1 | 0 |
| சுவர்ணம்பாள் ... | 0 | 12 |
| தேவசுந்தரி ... | 1 | 4 |
| குணசுந்தரன் ... | 0 | 12 |
| பத்மாஸனி ... | 0 | 14 |
| ஆனந்தஸிங் ... | 2 | 0 |
| மின்சார மாயவன் ... | 1 | 8 |
| ஆனந்தஸிங்கின் அஷ்டஜயங்கள் | 1 | 12 |
| ஆரூர் இலக்ஷ்மணன் ... | 2 | 0 |
| கைவல்விய நவநீத வசனம் ... | 1 | 8 |
| சகோதரவாஞ்சை ... | 0 | 7 |

---

| | ரூ. | அ. |
|---|---|---|
| தத்வசங்க்ரஹ ராமாயணம் ... | 4 | 0 |
| ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சருடைய சரித்திரமும் உபதேசங்களும் | 1 | 12 |
| விவேகானந்தர் ... | 4 | 0 |
| தமிழ் மெடீரியா மெடிகா ... | 3 | 0 |
| மாதவி மாதவன் 2-பாகம் ... | 2 | 0 |
| மலையாள பகவதி ... | 1 | 0 |
| அற்புத நவநீத ரமபை ... | 1 | 0 |
| அகடவிகட விலாச விநோதம் | 0 | 10 |
| சீமாட்டி கார்த்தியாயினி ... | 0 | 12 |

| | ரூ. | அ. |
|---|---|---|
| ஞயாயாளன் கதை ... | 0 | 12 |
| பூலோக லக்ஷ்மி கதை ... | 0 | 10 |
| கனகரத்தினம் ... | 0 | 8 |
| கண்டிராஜா நாடகம் ... | 0 | 12 |
| நளின சுந்தரி ... | 0 | 10 |
| கம்பராமாயண வசனசங்கிரகம் | 2 | 0 |
| குசேலோபாக்கியான வசனம் | 1 | 0 |
| ஸ்ரீபாலன் ... | 0 | 8 |
| உதயணன் ... | 0 | 7 |
| தசக்கிரீவன் ... | 0 | 14 |
| போஜ சரித்திரம் ... | 0 | 5 |
| சதானந்தர் ... | 1 | 4 |
| ஜீவகன் வசனம் ... | 1 | 0 |
| கர்ணன் சரிதை ... | 0 | 12 |
| பீஷ்ம விஜயம் ... | 0 | 10 |
| கீர்த்திசிங்கன் ... | 0 | 8 |
| முப்பெருந்தாசர் ... | 0 | 10 |
| அரிச்சந்திரன் சரிதை ... | 0 | 8 |
| நீலக்கொடி ... | 0 | 5 |
| மணவாளன் ... | 0 | 8 |
| பரசுராமன் ... | 0 | 8 |
| சிசுபாலன் ... | 0 | 8 |
| அங்கதன் ... | 0 | 4 |
| தசாவதாரம் ... | 0 | 6 |
| கிருஷ்ணன் தூது வசனம் ... | 0 | 8 |
| சண்டோபாக்யானம் ... | 0 | 6 |
| கருணைகாரும் சத்தியசீலரும் | 0 | 8 |
| சத்தியவசனி | 0 | 4 |
| விமலன் ... | 0 | 4 |
| கண்ணபிரான் ... | 0 | 4 |
| செய்யுட்பாடத்திரட்டு ... | 0 | 4 |
| நாலுமந்திரி கதை ... | 0 | 4 |
| மங்களேசுவரன் ... | 0 | 6 |
| தக்கன் ... | 0 | 6 |
| சீமந்தனி ... | 0 | 8 |
| நான்குகோடி ... | 0 | 4 |
| மதிமோசவிளக்கம் ... | 1 | 0 |
| மெய்க்காதலி ... | 0 | 8 |
| மேனுமினுக்கி கதை ... | 0 | 8 |
| வீணைகானன் ஞானேந்திரி ... | 0 | 8 |
| மகே[illegible] கதை ... | 0 | 8 |
| [illegible]மனுல்லி கதை ... | 0 | [illegible] |
| [illegible]வல்லி கதை ... | 0 | [illegible] |
| தாசிகட்ட மறந்த கதை ... | 0 | 5 |

# "பிரசண்ட விகடன்"

## மாதம் இருமுறை வெளிவரும்

## ஒரு வைஸ்யப் பத்திரிகை.



இதில் சிறப்பாக அரசியல், சமூகவியல், சமயவியல் சம்பந்தமான எல்லா விஷயங்களும் விலாப் புடைக்கச் சிரிக்கச் செய்யும் தோரணையில் தமாஷாகவும், வேடிக்கையாகவும், விநோதமாகவும், கேலியாகவும் வெளிவரும். ஏராளமான அபூர்வ அதி விசித்திரப் படங்கள் பத்திரிகையை அலங்கரித்து வரும். தேச சமூக விடுதலைக்கு உழைப்பது. இன்றே சந்தாதாரராகச் சேர முந்துங்கள்.

**ஆண்டுச் சந்தா தபால் கூலி யுட்பட உள்நாடு ரூ. 2—0—0.**

**வெளிநாடு ரூ. 3—0—0.**

**தனிப்பிரதி விலை அணா 1½.**

குறிப்பு:—ஏஜண்டுகளாக விரும்புவோர் மனேஜர் காரியாலயத்திற்கு எழுதி விவரம் தெரிந்துகொள்ளலாம்.

ரயில்வே ஸ்டேஷன்களிலுள்ள ஹிக்கின்பாதம் புஸ்தகசாலைகளிலும் "சுதேசமித்திரன்" புஸ்தக சாலைகளிலும், எல்லா ஊர்களிலுமுள்ள ஏஜண்டுகளிடமும் "பிரசண்ட விகடன்" 1½ அணாவுக்கு விற்கப்படும்.

**ஏஜெண்டுகள் இல்லாத ஊருக்கு ஏஜண்டுகள் தேவை.**

---

மானேஜர், "பிரசண்ட விகடன்" ஆபீஸ்.
நெ. 6, லாயர் சின்னதம்பி முதலி தெரு, மதராஸ்.

EDITED, PRINTED & PUBLISHED BY N. MUNISAMI MUDALIAR,
AT THE "ANANDA BODHINI" PRESS,
6 LAWYER CHINNATHAMBI MUDALI STREET, MADRAS